श्री गुरुभ्यो नमः

# सुभाषितानि

प्रथमो भागः

# நல்லுரைகள்

முதல் பாகம்

ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஜகத்குரு
**ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்**

அவர்களின் அருளாணைப்படி

வெளியிடப் பெற்றது

2001

விருஷ - வைகாசி

# सुभाषितानि

## प्रथमो भागः

# நல்லுரைகள்

## முதல் பாகம்

ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஜகத்குரு

**ஸ்ரீ சங்கராசார்ய ஸ்ரீ சரணர்களின்**

அருளாணைப்படி

தொகுத்தவர்

**S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரி, ஸ்ரீரங்கம்**

வெளியிட்டவர்

**ஸ்ரீ ஈ. வைத்யநாதய்யர் மெமோரியல் டிரஸ்ட்**

திருச்சிராப்பள்ளி - 620 018

வ்ருஷ - 2001

Copies : 1000

First Edition : 2001

*கிடைக்குமிடம் :-*

**ஸ்ரீ D. வைத்யநாதய்யர் மெமோரியல் டிரஸ்ட்**

**V. வெங்கடேசன் (கண்ணன்)**
72, சந்திரசேகரபுரம், சாலைத் தெரு,
உறையூர், திருச்சிராப்பள்ளி - 620 018.

Price Rs. 20/-

Lasertypeset & Printed at :
**V.K.N. ENTERPRISES,**
8/1, Dr. Rangachari Road, Mylapore, Chennai-4 Phone: 495 0775

॥ श्री गुरुभ्यो नमः ॥

# सुभाषितानि
# நல்லுரைகள்

1. **धर्मो रक्षति रक्षितः ।**
*தர்மம் பேணி வளர்க்கப் பெறும்போது நம்மை அது பேணி வளர்க்கிறது.*

2. **तृप्तिस्तु परमं धनम् ।**
*மன நிறைவு பெருஞ் செல்வம்.*

3. **अकस्मादेति तद्वित्तं याति चाकालमेघवत् ।**
*திடீரெனக் குவியும் மேகம் போல், செல்வம் குவியும். அவ்வாறே விலகும்.*

4. **अकाण्ड पातोपनता कं न लक्ष्मीर्विमोहयेत् ।**
*திடீரெனக் குவிந்த செல்வம் யாரைமயக்காது?*

5. **अकारणाविष्कृत वैरदारुणाः दुर्हृदः ।**
*கெட்ட எண்ண முள்ளவர் காரணமின்றி விரோதம காட்டிக் கொடுஞ் செயல் புரிவர்.*

6. **अकार्यं अश्रद्धेयं परमर्म च न भाषेत ।**
*தகாத செயல், நம்பத்தகாத செய்தி, பிறரது ரகசியம் இவற்றை வெளியிடாதே.*

7. **अकुलीनोऽपि विनीतः कुलीनात् विशिष्टः ।**
*நல்வழி செல்பவன் நற்குலத்தில் பிறவாதிருந்தாலும் (நல்வழி செல்லாத) நற்குலத்தில் பிறந்தவனைவிட மேலானவன்.*

8. **अकृतज्ञस्य व्यसनेषु न सहन्ते सहायाः ।**
*நன்றியற்றவன் துன்புறும்போது எவரும் துணை புரியமாட்டார்.*

9. **अकृत्यं मन्यते कृत्यं, स शठः ।**
*தகாத செயலைத் தக்கச் செயலாகக் கருதுபவன் போக்கிரி.*

10. अकृत्यं नैव कर्तव्यं प्राणत्यागेऽप्युपस्थिते ।
உயிர் துறக்கும் நிலையிலும் தகாததைச் செய்யக் கூடாது.

11. अर्के चेन्मधु विन्देत किमर्थं पर्वतं व्रजेत् ?
வீட்டுக் கொல்லைப் புறத்தில் தேன் கிட்டிடில் ஏன் மலையேற வேண்டும்?

12. अक्रोधेन जयेत्क्रोधम् ।
கோபத்தைக் கோபமின்மையால் வெல்ல வேண்டும்.

13. अक्षोभ्यतैव महतां महत्त्वस्य हि लक्षणम् ।
கலங்காதிருத்தலே பெரியோரின் பெருமைக்கு இலக்கணம்.

14. अगच्छन्वैनतेयोऽपि पदमेकं न गच्छति ।
கருடனுயினும் அசையாதிருந்தால் ஓரடி நகரமுடியாது.

15. अगुणस्य हतं रूपम् ।
நற்குணமில்லாதவனின் அழகு வீண்.

16. अङ्कमारुह्य सुप्तं हि हत्वा किं नाम पौरुषम् ?
(நம்பி) மடி மீதேறித் தூங்குபவனைக் கொல்வதில் ஏது ஆண்மை?

17. अङ्गीकृतं सुकृतिनः परिपालयन्ति ।
நல்லோர் ஏற்றுக் கொண்டபடி நடப்பர். (தந்த உறுதி மொழியைக் காப்பாற்றுவர்).

18. अचिन्त्यं शीलगुप्तानां चरितं कुलयोषिताम् ।
நல்லொழுக்கத்தின் பாதுகாப்பிலுள்ள நற்குலப் பெண்களின் நடைமுறை சிந்தைக் கப்பாற்பட்டது.

19. अचिन्त्यं हि फलं सूते सद्यः सुकृतपादपः ।
புண்யமெனும் மரம் எண்ணிப் பார்த்திராத நற்பயனை உடன் தரும்.

20. अचिन्त्याः खलु ये भावाः न तान् तर्केषु योजयेत् ।
சிந்திக்க முடியாதவற்றை வீண் வாதத்தினுட்படுத்தக் கூடாது.

21. अचिन्त्यो बत दैवेनाप्यापातः सुखदुःखयोः ।
சுகமும் துக்கமும் நேரும் தருணம் தெய்வத்திற்கும் தெரியாது.

22. अजरामरवत् प्राज्ञो विद्यां अर्थं च साधयेत्।
முதுமையும் சாவுமில்லாதவன் போல் அறிஞன் கல்வியையும் பொருளையும் சேர்க்க வேண்டும்.

23. अजानानो हठात्कुर्वन् प्राज्ञमानी विनश्यति।
தானே பேரறிவாளனென அகந்தை கொண்டு முறையறியாமல் வீண் பிடிவாதத்துடன் செயல்படுபவன் அழிவான்.

24. अजितात्मा नरपतिः कथं विजयते रिपून् ?
தன்னையே கட்டுக் குட்படுத்த இயலாத மக்கள் தலைவன் எதிரிகளை எப்படி அடக்குவான்?

25. अज्ञता कस्य नामेह नोपहासाय कल्पते ?
அறியாமை யாரைத்தான் கேலிக்கு ஆளாக்காது?

26. अज्ञात हृदयेष्वेव वैरीभवति सौहृदम्।
இதயத்தைப் புரிந்து கொள்ள முடியாதவரிடம் நட்பும் விரோதமாகிவிடும்.

27. अतिभुक्तिः अतीवोक्तिः सद्यः प्राणापहारिणी।
அளவுக்கு மீறிய உணவும், வரம்பு மீறிய பேச்சும், உடன் உயிரைப் போக்கும்.

28. अतिदानाद्बलिर्बद्धः ह्यतिमानात्सुयोधनः।
विनष्टो रावणो लौल्यात् अति सर्वत्र वर्जयेत्।
வரம்பு மீறி வழங்கியதால் பலி கட்டப்பட்டான். அதிகச் செருக்கால் துர்யோதனனும், அதிகச் சபலத்தால் ராவணனும் அழிந்தனர். எதிலும் வரம்பு மீறுவது தவிர்க்கத் தக்கது.

29. अतिपरिचयात् अवज्ञा, सन्ततगमनादनादरो भवति।
அதிகப் பழக்கத்தால் அவமதிப்பும், அடிக்கடி அணுகுவதால் ஆதரவின்மையும் நேரும்.

30. अतृणे पतितो वह्निः स्वयमेवोपशाम्यति।
பற்றி எரிய இயலாதவற்றில் விழுந்த தீ தானே அணைந்து விடும்.

31. अत्यन्तविमुखे दैवे व्यर्थयत्ने च पौरुषे।
मनस्विनो दरिद्रस्य वनादन्यत्कुतः सुखम्॥

விதி பராமுகமாக இருக்கையில், மனிதயத்தினமும் வீணாகும் போது, முழுமனத்துடன் உழைக்கிற ஏழைக்குக் காட்டிற்கு ஓடுவதைத் தவிர வேறு வழி ஏது?

32. अत्युच्चैर्भवति हि लघीयसां हि धाष्टर्यम् ।
அற்பனின் திமிர் அளவிற்கு மீறி வெளிப்படும்.

33. अत्युत्कटैः पुण्यपापैरिहैव फलमश्नुते ।
நற்செயலோ தீச் செயலோ மிகத் தீவிரத்துடன் செய்யப் பட்டால் உடன் பலன் தரும்.

34. अदृश्यमाना चपला जरेव निद्रा नृवीर्यं परिभूय वर्धते ।
அறிவிற்குப் புலப்படாமலேயே முதுமை மனிதனின் ஆற்றலைக் குறைத்துக் கொண்டே முன்னேறுவதுபோல், தூக்கமும் மனிதனின் ஆளுமையைக் குறைத்துத் தான் வலிவடையும்.

35. अधर्मविषवृक्षस्य पच्यते स्वादु किं फलम् ?
அதர்மம் என்ற நச்சு மரத்திலிருந்து இனிய காய் காய்க்குமா? இனிய பழம் பழுக்குமா?

36. अनन्यगामिनी पुंसां कीर्तिरेका पतिव्रता ।
மனிதனின் நற் செயலுக்கான புகழ் பதிவிரதைபோல் அவனை விட்டகலாது.

37. अनपेक्ष्य गुणागुणौ जनः स्वरुचिं निश्चयतोऽनुधावति ।
குணத்தையும் தோஷத்தையும் பொருட்படுத்தாமல் மனம் நாடுவதை நம்பிச் சிந்தனையின்றி தொடர்வது மக்கள் இயல்பு.

38. अनभिध्या परस्वेषु सर्वसत्वेषु सौहृदम् ।
कर्मणां फलमस्तीति त्रिविधं मनसा चरेत् ॥
பிறரது பொருளை நாடாமை, எல்லா உயிரினத்திடமும் நல்லிணக்கம், செய்கிற செயலுக்குப் பின் விளைவு உண்டு என்ற நம்பிக்கை இவை மனத்தால் புரிகிற நற்செயல்கள்.

39. अनवसरे याचितमिति सत्पात्रायापि कुप्यते दाता ।
நல்லவனுயினும், தக்க பாத்திரம் எனினும் உரிய தருணமல்லாதபோது யாசித்தால் அவனிடம் தானம் தருபவன் கோபிப்பான்.

40. अनार्यजुष्टेन पथा प्रवृत्तानां शिवं कुतः?
மேலோர் செல்லாத வழியில் செல்பவருக்கு ஏது நன்மை?

41. अनार्य सङ्गमाद् वरं विरोधोऽपि समं महात्मभिः।
மேலோரல்லாதவருடன் சேருவதைவிட மேலோரை எதிர்ப்பதே மேல்.

42. अनाश्रया न शोभन्ते पण्डिता वनिता लताः।
அண்டி நிற்கத் தக்கவரது துணையின்றி அறிஞரோ, மகளிரோ கொடிகளோ பெருமை பெறுவதில்லை.

43. अनिक्षुपादपे देशे मधूककुसुमं सिता।
கரும்பில்லாத ஊரில் இலுப்பைப் பூ சர்க்கரை.

44. अनियुक्तोऽपि च ब्रूयात् यदीच्छेत्स्वामिनो हितम्।
தலைவனின் நன்மையை விரும்பினால் (நன்மை கூறப்) பணிக்கப் படாவிட்டாலும் நன்மை கூற வேண்டும்.

45. अनिर्वेदः श्रियो मूलम्।
மனம் தளராதிருத்தல் மேன்மையின் வேர்.

46. अनुगन्तुं सतां वर्त्म कृत्स्नं यदि न शक्यते।
स्वल्पमप्यनुगन्तव्यं मार्गस्थो नावसीदति।
நல்லோர் சென்ற வழியை முழுவதும் பின் பற்றிச் செல்ல இயலாவிடில் சிறிதளவாவது அவ்வழியே செல்ல வேண்டும். அவ்வழியிலிருப்பவன் துயருறுவதில்லை.

47. अनुच्चपादपे देशे एरण्डोऽपि द्रुमायते।
வேறு நெடிதுயர்ந்த மரமில்லாத இடத்தில் ஆமணக்குஞ் செடியும் மரமாகிவிடும்.

48. अनुत्साहः सर्वव्यसनानां आगमनद्वारम्।
உற்சாகமின்மையே எல்லாதுன்பங்களுக்கும் நுழைவாயில்.

49. अनुत्सेकः किल विक्रमालङ्कारः।
திறமைக்கு அழகு செருக்கடையாமை.

50. अनुभवति हि मूर्ध्ना पादपस्तीव्रमुष्णं
शमयति परितापं छायया संश्रितानाम्॥
மரம் தலையால் கடுஞ் சூட்டை அனுபவிக்கிறது. தன்னை அண்டியவருக்கு நிழலால் சூட்டைத் தணிக்கிறது.

51. अनुरागान्धमनसां विचारसहता कुतः?
காதலால் குருடான மனமுள்ளவருக்கு பகுத்தறிவு ஏது?

52. अनुष्ठानेन रहिता पाठमात्रेण केवलम्।

रञ्जयत्येव या लोकं किं तया शुकविद्यया॥
நடைமுறை பழகாமல் கற்பதோடுமட்டும் நின்ற கல்வி மனத்தை மகிழ்விப்பதாயினும் கிளிப்பிள்ளை கற்ற அளவுதான். அதனால் என்ன பயன்?

53. अनुसृत्य सतां वर्त्म यत्स्वल्पमपि तद्बहु।
நல்லோரின் வழியைப் பின்பற்றிப் பெற்றது சிறிதளவே யாயினும் அது பெரிதே.

54. अन्तः प्रच्छन्नपापानां शास्ता वैवस्वतो यमः।
தீய எண்ணத்தை உள்ளத்தினுள் நன்கு மறைத்து வைத்தவரைக் கண்டிப்பவர் சூரியனின் புதல்வன் யமனே.

55. अन्तः सारविहीनानां उपदेशो न विद्यते।
உள்ளத்து வலிவில்லாதவருக்கு வழி காட்டுதல் பயன்படாது.

56. अन्धस्य दीपो बधिरस्य गीतं वृथा।
குருடனுக்கு விளக்கும், செவிடனுக்குப் பாட்டும் வீண்.

57. अन्धो वरं न धर्मान्धः।
கண்ணால் குருடன் மேல். தர்மத்தில் குருடன் மேலானவல்ல.

58. अन्धादिह को विशिष्यते ? रागी।
குருடனை விஞ்சுபவன் எவன்? பொருள் நாட்ட மிக்கவன்.

59. अन्नदानं परं शस्तं, विद्यादानमतः परम्।

अन्नेन क्षणिका तृप्तिः यावज्जीवं च विद्यया॥
உணவளிப்பது மிகச் சிறந்தது. கல்வியளிப்பது அதனைவிடச் சிறந்தது. உணவால் உண்டவேளைக்கு மட்டும் மன நிறைவு. கல்வியால் வாழ்நாள் முழுதும் மன நிறைவு.

60. अन्यस्मात् लब्धपदो नीचः प्रायेण दुःसहो भवति ।
*பிறருதவியால் பதவி பெற்ற நீசன் பெரும் பாலும் அணுக எளியவனாகமாட்டான்.*

61. अन्यस्य वित्तं, स्वमतिं च नैकगुणं प्रपश्यन्ति जना जगत्याम् ।
*மக்கள் பிறரது செல்வத்தையும் தனது அறிவாற்றலையும் ஸமமாக எடை போடுவதில்லை.*

62. अन्यायः प्रौढवादेन नीयते न्यायतां यया ।
न्यायश्चान्यायतां लोभात् किं तया क्षुद्रविद्यया ॥
*போலியான அறிவு முதிர்ச்சியைக் காட்டுகிற விதண்டைப் பேச்சால் அநியாயத்தை நியாயமாகவும், நியாயத்தை அநியாயமாகவும் திரித்துக் காட்டுகிற அந்த அற்பமான கல்வியால் என்ன பலன்?*

63. अन्याय प्रवृत्तस्य न चिरं संपदो भवन्ति ।
*நேர்மையற்ற வழியில் செல்பவனது செல்வம் நீடித்திராது.*

64. अन्वयागतविद्यानां अन्वयागतसंपदाम् ।
विदुषां च प्रभूणां च हृदयं नावलिप्यते ॥
*வம்ச வழியே கல்வி பெற்ற அறிஞருக்கும் வம்ச வழியே செல்வம் பெற்ற தனிகருக்கும் இதயம் செருக்குறுது.*

65. अपकारिषु यः साधुः स साधुः सद्भिरुच्यते ।
*அபகாரம் செய்தவனிடத்திலும் நல்ல முறையில் பழகுபவனே நல்லவன்.*

66. अपदे पदमर्पयन्ति हि श्रुतवन्तोऽपि रजोनिमीलिताः ।
*கல்விபெற்றும் அகந்தையால் கண் மூடியவர் அடிவைக்கத் தகாத இடத்தில் அடிவைப்பர்.*

67. अपवाद एव सुलभो द्रष्टुर्गुणो दूरतः ।
*வெளியில் நின்று பார்ப்பவனுக்குக் குறைமட்டும் தெரியும். சிறப்பு கண்களில் படாமல் தூரத்தில் நிற்கும்.*

68. अपि धन्वन्तरिर्वैद्यः किं करोतु गतायुषि ?
*தந்வந்தரியே மருத்துவராயினும் ஆயுள் முடிந்தவனிடம் என்ன செய்வார் ?*

69. अपि मुदमुपयान्तो वाग्विलासैः स्वकीयैः

परभणितिषु तृप्तिं यान्ति सन्तः कियन्तः ?

*தன் பேச்சில் அழகு கண்டு மகிழ்பவர் உண்டு. பிறர் பேச்சில் திருப்தி பெறும் நல்லோர் எத்தனை பேர்?*

70. अपि स्वदेहात् किमुतेन्द्रियार्थात् यशोधनानां हि यशो गरीयः।

*தன் உடலையும் புலனின்பத்தையும் விடப் புகழையே செல்வமாக மதிப்பவருக்குப் புகழே மிகப் பெரிது.*

71. अपूर्वः कोऽपि कामान्धः दिवा नक्तं न पश्यति।

*காமத்தால் குருடானவன் ஒரு தனிப் பிறவி. பகலிலும், இரவிலும் அவன் எதனையும் காணமாட்டான்.*

72. अपेक्षते स्वावसरं ध्रुवं जनः।

*அவனவன்-தனக்குரிய வாய்ப்பையே எதிர்பார்ப்பான்.*

73. अपेक्षन्ते हि विपदः किं पेलवमपेलवम् ?

*நெருக்கடிகள் (தாம் நிகழ்வதற்குமுன்) இவன் மென்மை மிக்கவன். (தாங்க இயலாதவன்) இவன் திடமானவன் (தாங்குபவன்) எனவா எதிர்பார்க்கும்?*

74. अप्यप्रसिद्धं यशसे हि पुंसां अनन्यसाधारणमेव कर्म।

*பலரறியாதிருப்பினும் மற்றவரால் இயலாத பணியைச் செய்து முடிப்பதே மனிதருக்குப் புகழ் தருவதாகும்.*

75. अप्रकटीकृतशक्तिः शक्तोऽपि जनः तिरस्क्रियां लभते।

*ஆற்றல் மிக்கவனும் தன் ஆற்றலை முறைப்படி வெளிப்படுத்தாதிருந்தால் அவமதிக்கப்படுகிறான்.*

76. अप्राप्तकालं वचनं बृहस्पतिरपि ब्रुवन्।

प्राप्नुयात् बुद्ध्यवज्ञानं अपमानं च शाश्वतम्।

*அந்தந்த நேரத்திற்குப் பொருந்தாததைக் கூறுபவன், பிருஹஸ்பதியாயினும் தன் அறிவின்மையை வெளிப்படுத்துவதுடன் நிலைத்த அவமதிப்பையும் பெறுகிறான்.*

77. अप्राप्यं नाम नेहास्ति धीरस्य व्यवसायिनः ।

உழைப்பும் அறிவாற்றலும் மிக்கவனால் அடைய இயலாத தொன்றுமில்லை.

78. अप्रियस्य च पथ्यस्य वक्ता श्रोतापि दुर्लभः ।

கேட்பவன் விரும்பாவிடினும் தக்க நல்வழி கூறுபவன் அரிது. அப்படிச் சொல்வதைக் கேட்பவனும் அரிது.

79. अभद्रं भद्रं वा विधिलिखितमुन्मूलयति कः ?

கெட்டதோ, நல்லதோ விதி எழுதியதை எவனால் மாற்ற இயலும்?

80. अभितप्तमयोऽपि मार्दवं भजते कैव कथा शरीरिषु?

இரும்பும் காய்ச்சப்பெறின் மென்மை பெறும் எனில் மனிதர் எம்மாத்திரம்?

81. अभिमानविहीनानां किं धनेन किं आयुषा ?

தற்பெருமையில்லாதவருக்குச் செல்வமும், ஆயுளும் ஒரு பொருட்டாகுமா?

82. अभ्यर्थनाभङ्ग भयेन साधुः माध्यस्थ्यमिष्टेऽप्यवलम्बतेऽर्थे ।

நல்லவன், தன் கோரிக்கை வீணாகுமோ என்ற பயத்தால் தன் விருப்பத்திற்கு உரிய பொருளையும் கேட்காமல் நடு நிலையைக் கடைபிடிப்பான்.

83. अभ्युदय-निःश्रेयस हेतुः स धर्मः ।

இன்றைய வாழ்வில் நன்மையையும் மறுமையில் மேன்மையையும் பெற உதவுவதே தர்மம்.

84. अमन्त्रमक्षरं नास्ति नास्ति मूलमनौषधम् ।
अयोग्यः पुरुषो नास्ति योजकस्तत्र दुर्लभः ॥

மந்திரமாகத் தகாத எழுத்து கிடையாது. மருந்தாகப் பயன்படாத வேரும் பணிக்கு உதவாத மனிதனும் கிடையாது. உரியபணியில் பொருத்துபவர் அங்கு இல்லை.

85. अमर्षणः शोणितकांक्षया किं पदा स्पृशन्तं दशति द्विजिह्वः ।

காலால் தன்னைத் தீண்டியவனை ரக்தம் குடிக்கவா பாம்பு கடிக்கிறது? காலால் தன்னைத் தீண்டியதைப் பொறுக்காத

தால் (அவமதிப்பைப் பொறுக்காததால்) அல்லவா தீண்டியது?

86. अमर्षशून्येन जनस्य जन्तुना न जातहार्देन न विद्विषाऽऽदरः ।

பொறுமையின்றி விருப்பு வெறுப்பின்றி தன்னை எவருக்கும் எதிரியாக்கிக் கொள்ளாத ஒருவனால்தான் மக்களின் ஆதரவைப் பெறமுடியும்.

87. अमृतं राहवे मृत्युः विषं शंभोर्विभूषणम् ।

(திருப்பாற்கடலிலிருந்து தோன்றிய) அமுதம் ராஹுவிற்கு அழிவைத் தந்தது. விஷம் சிவபெருமானது கழுத்தணியானது.

88. अमेधसो हि श्रीरनर्थायैव ।

அறிவில்லாதவனது செல்வம் கேடுவிளைவிக்கும்.

89. अयाच्यो नार्तानां, अनुपकरणीयो न महताम् ।

ஏழ்மையால் வருந்துபவனுக்கு யாசிக்கத்தகாதவர் என எவருமில்லை. பெரியோருக்கு உதவத் தகாதவன் என எவருமில்லை.

90. अयातपूर्वा परिवादगोचरं सतां हि वाणी गुणमेव भाषते ।

நல்லோரது உபதேச மொழி என்றும் தானும் இகழப் பெறாதது. பிறரை இகழவும் பயன்படாதது. சிறப்பை மட்டுமே அது விளக்கும்.

91. अयि खलु विषमः पुराकृतानां भवति हि जन्तुषु कर्मणां विपाकः ।

முன் செய்த வினைகளின் பின் விளைவு எதிர்பார்ப்பிற்கு மாறுபட்டிருக்கும்.

92. अरक्षितं तिष्ठति दैवरक्षितम् ।

காக்கக் கடமைப்பட்டவர் காக்காதபோது அது தெய்வத்தால் காக்கப்படுகிறது.

93. अरुन्तुदत्वं महतां ह्यगोचरम् ।

பிறர் மனம் புண்பட நடப்பது நல்லோர் வழியில்லை.

94. अर्थनाशं मनस्तापं गृहे दुश्चरितानि च ।
वञ्चनं चापमानं च मतिमान्न प्रकाशयेत् ॥

பொருளை இழந்தது, மனத்தாபம், வீட்டினுள்ளவரின் நடைமுறை பிசகுதல், ஏமாற்றம், அவமதிப்பு இவற்றை அறிவாளி வெளியிடக் கூடாது.

95. अर्थमनर्थं भावय नित्यं नास्ति ततः सुखलेशः सत्यम् ।

மனம் நாடியதனைத்தும் பொருட்படுத்தத் தக்கதல்ல. அவற்றைப் பெறுவதால் மட்டும் இன்பம் சிறிது மில்லை என்பதே உண்மை.

96. अर्थातुराणां न गुरुर्न बन्धुः ।

பொருள் நாட்டம் மிக்கவருக்கு, குருவும் (பெரியவர்களும்) இல்லை. உறவினருமில்லை.

97. अर्थो हि कन्या परकीय एव ।

பெண் எனும் செல்வம் பிறரது உடமையல்லவா ?

98. अर्थिनि जने त्यागं विना श्रीश्च का?

உதவி நாடி வந்தவனுக்குக் கொடுப்பதற்கல்லாமல் செல்வத்திடம் என்ன உரிமை?

99. अर्धो घटो घोषमुपैति नूनम् ।

அரை குறையாக நிரம்பிய குடம் சத்தம் போடும் (தளும்பும்).

100. अलब्धशाणोत्कषणा नृपाणां न जातु मौलौ मणयो वसन्ति ।

சாணை தீட்டப் பெறாதவரை சிறந்த ரத்தினங்களும் அரச கிரீடத்தில் இடம் பெறுவதில்லை.

101. अलभ्यं लब्धुकामस्य जनस्य गतिरीदृशी ।
अलभ्येषु मनस्तापः सञ्चितार्थो विनश्यति ॥

கிடைக்கப் பெறாத பொருளை நாடுபவனுக்கு, அது கிடைக்காத வரை ஏக்கம், பெற்றபின் அழிவதால் ஏற்பட்ட வருத்தம் என்ற இரு நிலைகள் உண்டு.

102. अलभ्ये सौलभ्यचिन्ता मृगमरीचिकेव कान्दिशीकतां गमयति ।

கிடைக்கமுடியாததை எளிதில் பெறமுடியும் என நினைப்பது கானல் நீரைத் தேடித் திக்கு தெரியாமல் அலைகிற நிலை தரும்.

103. अलब्ध्वाऽपि धनं राज्ञः संश्रिता यान्ति संपदम् ।
महाह्रदसमीपस्थं पश्य नीलं वनस्पतिम् ॥
அரசரிடமிருந்து நேரிடையாகச் செல்வம் பெறுதவரும் அவரை அண்டி வாழ்வதாலேயே செல்வம் பெறுவர். நீர் நிலை அருகே உள்ள பெரு மரம் பசுமை பெறுவதைப் பார்.

104. अलोकसामान्यं अचिन्त्यहेतुकं द्विषन्ति मन्दाश्चरितं महात्मनाम् ॥
பெரியோர்களின் நடைமுறையை உலகில் பொது மக்களிடையே காண்பதரிது. இனம் கண்டறிய இயலாதது. அறிவிலிகளே அந்த நடைமுறையை வெறுப்பர்.

105. अल्पसत्वेषु धीराणां अवज्ञैव हि शोभते ।
அற்பர்களின் செயல் முறையைப் பொருட்படுத்தாது இருப்பதே தீரர்களுக்கு அழகு.

106. अल्पस्य हेतोः बहुलः प्रयासः । मशकस्य हननाय महान् लगुडः ।
அற்பப் பொருளுக்காக மிகுந்த உழைப்பு. கொசுவை அடிக்கக் குண்டாந்தடி.

107. अल्पस्य हेतोर्बहु हातुमिच्छन् विचारमूढः प्रतिभासि मे त्वम् ।
அற்பத்திற்காக பலவற்றை இழக்க முற்படுகிற நீ ஆராயத் தெரியாத முட்டாளாகக் காணப்படுகிறாய்.

108. अल्पाक्षर रमणीयं यः कथयति निश्चितं स खलु वाग्मी ।
குறைந்த சொற்களால் அழகாகப் பேசுபவனே சிறந்த பேச்சாளன்.

109. अल्पीयसोऽप्यामयतुल्यवृत्तेः महापकाराय रिपोर्विवृद्धिः ।
உருவில் சிறியவனுயினும் கொடிய நோய் போல் செயல்படுகிற எதிரியின் வளர்ச்சி பெரும் கேடு விளைவிப்பதற்கே.

110. अवज्ञात्रुटितं प्रेम नवीकर्तुं क ईश्वरः ।
सन्धिं न याति स्फुटितं लाक्षालेपेन मौक्तिकम् ॥
அவமதிப்பால் ஒடிந்த அன்பை ஒட்டிப் புதுப்பிக்க எவரால் முடியும் ? உடைந்த முத்து அரக்குப் பூச்சால் இணையாது.

111. अवश्यमनुभोक्तव्यं कृतं कर्म शुभाशुभम्।

நல்லதோ, கெட்டதோ தான்செய்த செயலின்பின் விளைவை அனுபவிக்க வேண்டியதே.

112. अवसरपठिता वाणी गुणगणरहिताऽपि शोभते पुंसाम्।

உரிய ஸமயத்தில் சொன்ன சொல் அழகும் சிறப்புமற்றதாயினும் நன்கு விளங்கும்.

113. अवस्तुनि कृतक्लेशो मूर्खो यात्यवहास्यताम्।

பொருட்படுத்தத் தகாததைப் பெற உழைப்பவன் முட்டாள். அவன் கேலிக்கு உட்படுவான்.

114. अवस्थाभेद एव व्यवस्थाभेदस्य हेतुर्भवति।

மாறுபட்ட சூழ்நிலைதான் கட்டுப்பாடு மாறுபடக் காரணமாகிறது.

115. अविद्याजीवनं शून्यं दिक्शून्या चेदबान्धवा।
पुत्रहीनं गृहं शून्यं सर्वशून्या दरिद्रता॥

கல்வியறிவற்ற வாழ்க்கை சூன்யம். உறவினரற்ற வெளி உலகம் சூன்யம். புதல்வனில்லாத வீடு சூன்யம். ஏழ்மைக்கு எங்கும் சூன்யம்.

116. अविशेषज्ञो विशिष्टैर्नाश्रीयते।

சிறப்பறியாதவன் சிறப்பை உணர்பவர்களால் அணுகப் பெறுவதில்லை.

117. अविश्रमो लोकतन्त्राधिकारः।

மக்களை ஆள்வது ஓய்வில்லாத பணி.

118. अवृत्तिकं त्यजेद्देशं वृत्तिं सोपद्रवां त्यजेत्।
त्यजेन्मायाविनं मित्रं धनं प्राणहरं त्यजेत्॥

பிழைக்க வழியற்ற தேசத்தையும், துன்பத்தை விளைவிக்கிற தொழிலையும், வஞ்சகனை நண்பனையும் உயிரை வாங்குகிற சொத்தையும் தவிர்க்க வேண்டும்.

119. अव्यवस्थितचित्तस्य प्रसादोऽपि भयङ्करः।

நிலையற்ற மனப் போக்குள்ளவனின் பரிவும் பயம் தரும்.

120. अव्याक्षेपो भविष्यन्त्याः कार्यसिद्धेर्हि लक्षणम्।
மனம் சிதறுதிருப்பது வரவிருக்கிற பணி நிறைவின் அடையாளம்.

121. अशीलं कस्य नाम स्यात् न खलीकारकरणम्।
ஒழுக்கமின்மை எவரைத் தான் இளப்பத்திற்கு ஆளாக்காது?

122. अशोच्या हि पितुः कन्या सद्भर्तृप्रतिपादिता।
தந்தைக்குத் தன் மகள் நல்ல மருமகனிடம் ஒப்படைக்கப் பட்டால், கவலைக்குரியவளாகாள்.

123. अश्नुते स हि कल्याणं व्यसने यो विमुह्यति।
நெருக்கடியில் கலங்காதவன் மங்களமான நிறைவையடைகிறுன்.

124. अश्लीलचित्राणि कपटमित्राणि च प्रच्छन्नविनाशकानि।
அமங்களமான (மன நிலையைக் கெடுக்கின்ற) சித்திரங்களும், வஞ்சமரன நண்பர்களும் மறைந்து நின்று கொல்பவர்.

125. असतः श्रीमदान्धस्य दारिद्र्यं परमाञ्जनम्।
பணத்திமிரால் குருடான தீயவனுக்கு ஏழ்மை சிறந்த கண்மை.

126. असतां सङ्गदोषेण साधवो यान्ति विक्रियाम्।
தீயவருடன் இணக்கத்தால் நல்லோரும் நிலை மாறுகின்றனர்.

127. असत्प्रलापं पारुष्यं पैशुन्यमनृतं तथा।
चत्वारि वाचा सर्वत्र न जल्पेत् नैव चिन्तयेत्॥
தீயவருடன் பேசுதல், பேச்சில் கொடூரம், கோள் சொல்லுதல், பொய் இந்த நான்கும் வாயால் செய்கிற தீமைகள். இத்தகைய பேச்சோ இப்படிப் பேச நினைப்பதோ கூடாது.

128. असन्तुष्टो द्विजो नष्टः सन्तुष्टः पार्थिवो हतः।
செய்ததில் மன நிறைவுறுத அந்தணன் கெடுவான். செய்தது போதுமென எண்ணுகிற அரசன் கெடுவான்.

129. असन्तोषः श्रियो मूलम्।

பெற்றதில் மன நிறைவடையாதிருத்தலே செல்வம் பெருக வழி.

130. असन्तोषस्य नास्त्यन्तः।

பெற்றதில் மனநிறைவின்மைக்கு எல்லேயில்லே.

131. असाध्यं साधयत्यर्थं हेलयाऽभिमुखो विधिः।

அனுகூலமான விதி சாதிக்க இயலாததையும் விளையாட்டாகச் சாதித்துத் தரும்.

132. असिद्धार्था निवर्तन्ते न हि कृतोद्यमाः।

தீரர் ஒன்றைச் செய்து முடிக்க முயன்றபின் அப்பணி நிறையுமுன் மனம் மாறித் திரும்ப மாட்டார்.

133. अहिंसा परमो धर्मः।

பிறரைத் துன்புறுத்தாதிருத்தலே பெரும் தர்மம்.

134. अहो दुरन्ता बलवद्विरोधिता।

வலிவு மிக்கவனை எதிர்ப்பது கெட்டமுடிவைத் தரும்.

135. अहो दैवाभिशप्तानां प्राप्तोऽप्यर्थः पलायते।

விதியால் சபிக்கப்பட்டவருக்குக் முன்னதாகக் கிட்டியதும் தப்பி ஓடிவிடும்.

136. अहो विधौ विपर्यस्ते न विपर्यस्यतीह किम्?

விதி தடம் புரண்டால், எது தடம் புரளாது?

137. आकण्ठ जलमग्नोऽपि श्वा लिहत्येव जिह्वया॥

கழுத்துவரை நீரில் அமிழ்ந்திருந்தாலும் நாய் நக்கியே பருகும்.

138. आकृष्टः कामलोभाभ्यां अपायं को हि पश्यति।

காமத்தாலும், பேராசையாலும் இழுபட்டவர் பின் தொடர்கிற அபாயத்தைக் காணமாட்டார்.

139. आज्ञा गुरूणां ह्यविचारणीया।

பெரியோரின் ஆணை ஆராய்விற்கப்பாற்பட்டது.

140. आज्ञामात्रफलं राज्यं ब्रह्मचर्यफलं तपः ।
परिज्ञानफला विद्या दत्तयुक्तफलं धनम् ॥
*அரசாட்சியால் எதிர்பார்க்கிற பயன் இட்ட ஆணை நிறைவேறுவது. தவத்தால் எதிர்பார்ப்பது பரம் பொருளிடம் இணைவது. கல்வியின் நோக்கம் சூழ்நிலை உணர்வது. செல்வத்தின் நோக்கம் தானமும் அனுபவமும்.*

141. आत्मनस्तु कामाय सर्वं प्रियं भवति ।
*தன் ஆசை நிறைவேறவே அனைத்தும் விரும்பப்படுகிறது.*

142. आत्मबुद्धिः सुखायैव परबुद्धिर्विनाशिनी ।
*சுயபுத்தி சுகம் தரும். பிறரது புத்தி அழிவைத் தரும்.*

143. आत्मंभरिः परित्यज्यते कलत्रेणापि ।
*தன்னை மட்டும் நிரப்பிக் கொள்பவன் (சுயநலமே குறியாக நிற்பவன்) கட்டிய மனைவியாலும் கைவிடப்படுவான்.*

144. आत्मानं पातयेद्यस्तु सोऽन्यानुद्धरते कथम् ?
*தன்னையே வீழ்த்தித் கொள்பவன் பிறரைத் தூக்கிவிடுவது எங்ஙனம்?*

145. आत्मानुशासनमेव आत्मविकासस्य मूलम् ।
*சுயக் கட்டுப்பாடே தன் வளர்ச்சிக்கு ஆணிவேர்.*

146. आत्मैव ह्यात्मनो बन्धुः आत्मैव रिपुरात्मनः ।
*தானே தனக்கு உதவுகிற சுற்றம். தானே தனக்கு எதிரி.*

147. आदानं हि विसर्गाय सतां वारिमुचामिव ।
*நல்லோர் தனக்கெனச் சேமிப்பது மேகம் போல் பிறருக்கு வாரி வழங்கவே.*

148. आदौ असत्यवचनं पश्चाज्जातो हि कुत्सितः ।
*முதலில் பொய் சொல்லத் தொடங்கப் பிறகு உலகம் அவனை நிந்தித்து ஒதுக்குவதில் முடிந்தது.*

149. आपत्कालेऽपि कष्टेऽपि नोत्साहः त्यज्यते बुधैः ।
*ஆபத்து நேரத்திலும், கஷ்டத்திலும் அறிவாளி உற்சாகமிழப்பதில்லை.*

150. आपत्सु धीरान् पुरुषान् स्वयमायान्ति संपदः ।
*ஆபத்திலும் மன உறுதியுடன் செயல்படுபவரைச் செல்வம் தானே நாடுகிறது.*

151. आपत्स्वेव हि महतां शक्तिरभिव्यज्यते न संपत्सु ।
*ஆபத்து நேரத்தில்தான் பெரியோர்களின் சக்தி வெளிப்படும், செழிப்புள்ளபோதல்ல.*

152. आपदि स्फुरति प्रज्ञा यस्य धीरः स एव हि ।
*ஆபத்தில் எவனது அறிவு தெளிவுடன் இயங்குகிறதோ அவனே தீரன்.*

153. आपद्यपि न त्याज्यं सत्वं संपदेषिभिः ।
*செழிப்பை விரும்புபவன் ஆபத்திலும் மனத்தை இழக்கக் கூடாது.*

154. आपन्नत्राणविकलैः किं प्राणैः पौरुषेण वा ?
*ஆபத்திலகப்பட்டவனைக் காப்பதில் தளர்கிற உயிரோ ஆற்றலோ இருந்தென்ன பயன்?*

155. आपन्नस्य विषयवासिनः आर्तिहरेण राज्ञा भवितव्यम् ।
*தன் தேசத்தில் வசிப்பவன் ஆபத்தில் சிக்கியுள்ள நிலையில் அவனது துயரைத் துடைப்பது அரசனின் கடமை.*

156. आपन्नार्ति प्रशमन फलाः संपदो ह्युत्तमानाम् ।
*ஆபத்தில் சிக்கியவனது துயரைத் துடைக்கவே மேலோரிடமுள்ள செல்வம் பயன்படும்.*

157. आपरितोषाद्विदुषां न साधु मन्ये प्रयोगविज्ञानम् ।
*அறிஞரின் பாராட்டுதலைப் பெறும்வரை செய்முறைச் சிறப்பைப் பெற்றதாக மதிக்கமாட்டேன்.*

158. आमुखापाति कल्याणं कार्यसिद्धिं हि शंसति ।
*எதிர்படுகிற மங்கள நிகழ்ச்சி செய்த பணியின் நிறைவை உறுதிப்படுத்தும்.*

159. **आ मृत्योः श्रियमन्विच्छेत् नैनां मन्येत दुर्लभाम् ।**

*உயிரின் இறுதிவரை செல்வத்தைத் தேட வேண்டும். அது கிடைத்தற்கரிது எனக் கருதக் கூடாது.*

160. **आम्रा नमन्ति फलिनः एरण्डा उच्छ्रयन्त्यपि ।**

*மாமரம் பழுத்தால் வணங்கி நிற்கும். ஆமணக்கு பழுத்தால் தலை நிமிர்ந்து நிற்கும்.*

161. **आये दुःखं व्यये दुःखं धिगर्थाः कष्टसंश्रयाः ।**

*சேமிப்பிலும் கஷ்டம், செலவிலும் கஷ்டம், பொருள் கஷ்டத்தின் இருப்பிடம்.*

162. **आरब्धमुत्तमगुणा न परित्यजन्ति ।**

*தொடங்கிய பணியைச் சிறந்தவர் கைவிடமாட்டார்.*

163. **आरब्धेऽति सुदुष्करेऽपि महतां मध्ये विरामः कुतः ।**

*தொடங்கிய பணி செயற்கெளியதல்ல வெனினும் நடுவில் ஓய்வு மேலோருக்கு ஏது?*

164. **आरंभसदृशा उदयः ।**

*தொடக்கத்திற்கேற்ப முன்னேற்றம்.*

165. **आर्जवं हि कुटिलेषु न नीतिः ।**

*நேர்மையற்றவரிடம் நேர்மை நல்வழி அல்ல.*

166. **आर्तत्राणाय वः (शास्त्रूणां) शस्त्रं न प्रहर्तुमनागसि ।**

*துயருற்றவனைக் காக்கவே ஆட்சியாளருக்கு ஆயுதம் தேவை. ஒரு தீதும் செய்யாதவனை அடிக்க அல்ல.*

167. **आर्यस्वभावानां मात्सर्यं कुतः ?**

*பெருந்தன்மையை இயல்பாகக் கொண்டவருக்கு எதில் பொறாமை வரும்?*

168. **आर्याः खलु अकार्येषु न प्रवर्तन्ते ।**

*பெருந்தன்மையுள்ளவர் தகாத செயல்களில் ஈடுபடமாட்டார்.*

169. आलस्योपहता विद्या।

கல்வி சோம்பலால் தடைபடும்.

170. आवेष्टितो महासर्पैः चन्दनः किं विषायते।

சந்தன மரம் நச்சுப்பாம்புகளால் சுற்றப்பட்டாலும் விஷமாகுமா?

171. आशु बध्नाति हि प्रेम प्राग्जन्मान्तरसंस्तवः।

முன் பிறவியில் ஏற்பட்ட அன்புத் தொடர்பு இப் பிறவியில் எளிதில் பிணைக்கும்.

172. आश्रयवशेन लघुता गुरुता वा जायते जन्तोः।
विन्ध्ये विन्ध्यसमानाः करिणो बत दर्पणे लघवः॥

அண்டி நிற்குமிடத்தை ஒட்டிச் சிறுமையும், பெருமையும் கிட்டும். விந்தியமலையில் மலை போல் காட்சி தருகிற யானைகள் கண்ணாடியில் மிகச் சிறியவையாகும்.

173. आहारशुद्धौ सत्वशुद्धिः।

உணவு தூயதாயின் உள்ளம் தூயதாகும்.

174. आहुः सप्तपदीं मैत्रीम्।

நட்பு கூட ஏழடி நடப்பதற்குள் அமையும் என்பர்.

175 इच्छादानपरोपकारकरणं, पात्रानुरूपं फलम्।

தானமோ பிறருக்கு உதவுவதோ நம் விருப்பத்தை ஒட்டியது. அதன் பயன் அதைப் பெறுபவரை ஒட்டி இருக்கும்.

176. इच्छेच्चेद्विपुलां मैत्रीं त्रीणि तत्र न कारयेत्।
वाग्वादमर्थसंबन्धं तत्पत्नीपरिभाषणम्॥

ஒருவனுடன் ஆழ்ந்த நட்பை விரும்பினால், அவனுடன் பேச்சால் கலகம், பணத் தகராறு, அவன் மனைவி பற்றிய அவதூறு இவற்றைத் தவிர்க்க வேண்டும்.

177. इन्द्रोऽपि लघुतां याति स्वयं प्रख्यापितैर्गुणैः।

தானே தன் சிறப்பைப் பெரிதாகக் கூறுபவன் இந்திரனாயினும் மதிப்பிழக்கிறான்.

178. इन्धनौघधगप्यग्निः त्विषा नात्येति पूषणम् ।

*பெரும் விறகுப் பொதியை எரிக்கிற நெருப்பும் ஒளியால் சூரியனை மீற முடியாது.*

179. इयमुन्नतसत्वशालिनां महतां कापि कठोरचित्तता ।

उपकृत्य भवन्ति दूरतः परतः प्रत्युपकारचिन्तया ॥

*பெருமனம் கொண்ட பெரியோர் மனம் சில ஸமயம், பாறை போன்று கடினமாயிருக்கும். உதவி புரிந்த உடன் தூரவிலகிச் செல்வர், செய்த உதவிக்குப் பிரதியாக ஏதேனும் எதிர் பார்க்க நேருமோ என்ற பயத்தால்.*

180. इष्टं धर्मेण योजयेत् ।

*அன்பிற்குரியவனை அறவழியில் இணைக்க வேண்டும்.*

181. इष्टप्रवास जनितानि अबलाजनस्य

दुःखानि नूनमतिमात्र सुदुस्सहानि ।

*அன்பிற்குரியவரின் பிரிவு பெண்களுக்குத் தாங்க வொணாத துயரைத் தரும்.*

182. इष्टमूलानि शोकानि ।

*அன்பிற்குரியவர் மூலமே தான் சோகம் நேரும்.*

183. ईर्ष्या हि विवेकप्रतिपन्थिनी ।

*அசூயை பகுத்தறிவிற்கு எதிரி.*

184. उचितादहिताद्धीमान् क्रमशो विरमेन्नरः ।

हितं क्रमेण सेवेत क्रमश्चात्रोपदिश्यते ॥

पादेनापथ्यमभ्यस्तं पादपादेन वा त्यजेत् ।

निषेवेत हितं तद्वत् एकद्वित्र्यन्तरीकृतम् ॥

*தவிர்க்கத்தக்க ஹிதமற்ற வழியிலிருந்து சிறிது சிறிதாக விலக வேண்டும். அதே போன்று ஹிதமானவற்றையும் சிறுகச் சிறுகப் பழக வேண்டும். அதற்கான முறை பின் வருமாறு. ஒவ்வாதது பழக்கப்பட்டிருந்தால் நான்கில் ஒரு பங்கு அதில் குறைத்துப் பழகலாம். அதுவும் துன்பம்*

தந்தால் 16ல் ஒரு பங்கைத் தவிர்க்கலாம். ஹிதமானதைப் பழகும் போதும் நடு நடுவே 1-2-3 நாட்கள் வெளிவிட்டுப் பழகலாம்.

185. उच्छ्रायं नयति यदृच्छयापि योगः ।

எதேச்சையாக நேர்ந்த பழக்கமும் உயர்வைத் தரும்.

186. उत्कर्षायापि भूतानां संभवन्ति विपत्तयः ।

பெரும் இடையூறுகளே மக்களின் உயர்வின் பொருட்டும் நேரலாம்.

187. उत्तरोत्तर शुभो हि विभूनां कोऽपि मञ्जुलतमः क्रमवादः ।

படிப்படியாக நேர்கிற முன்னேற்றமே பெரியோரின் மனத்தை அதிகம் கவரும்.

188. उत्थान वीरः पुरुषो वाग्वीरान् अधितिष्ठति ।

வாய் வீரனை விடச் செயல் வீரன் மேலோங்கி நிற்கிறான்.

189. उत्सहन्ते न हि द्रष्टुं उत्तमाः स्वजनापदम् ।

தன் மக்களுக்கேற்படுகிற ஆபத்தை மேலோர் காண விரும்பமாட்டார்.

190. उत्साहैकधने च वीरहृदये नाप्नोति खेदोऽन्तरम् ।

உற்சாகமொன்றையே சிறப்பாகக் கொண்ட வீரனின் இதயத்தில் துயரம் இடம் பெறாது.

191. उदारचरितानां हि वसुधैव कुटुम्बकम् ।

பெருமனமும் பெரு நடைமுறையும் கொண்டவருக்கு உலகமே குடும்பம்.

192. उदारसत्वं वृणुते स्वयं श्रीः ।

பெருமனம் கொண்டவனை லக்ஷ்மி தானே சென்றடைவாள்.

193. उदारस्य तृणं वित्तं शूरस्य मरणं तृणम् ।
विरक्तस्य तृणं गेहः निः स्पृहस्य तृणं जगत् ॥

பெருமன முள்ளவனுக்குப் பணம் புல்லுக்குச் சமம். சூரனுக்கு மரணம் புல்லுக்குச் சமம். பற்றற்றவனுக்கு வீடு

புல்லுக்குச் சமம். ஆசையற்றவனுக்கு உலகம் புல்லுக்குச் சமம்.

194. उदिते हि सहस्रांशौ न खद्योतो न चन्द्रमाः ।
उदिते हि परानन्दे नाहं न त्वं न वै जगत् ।

சூரியன் உதித்தபின் மின்மினிப் பூச்சியோ சந்திரனோ ஒளி தராது. உள்ளத்தில் ஆத்மானந்தம் தோன்றிய பின் 'நான்', 'நீ' இந்த உலகம், என எதுவுமில்லை.

195. उदेति पूर्वं कुसुमं ततः फलं घनोदयः प्राक् तदनन्तरं पयः ।
निमित्तनैमित्तिकयोरयं क्रमः ।

பூ முன்னதாகத் தோன்றும், பிறகு காய். மேகம் தோன்றுவது முன், மழை நீர் பின்னர். காரண காரியங்களுக்கு இதுவே வரிசை.

196. उदेति सविता रक्तो रक्त एवास्तमेति सः ।
संपत्तौ च विपत्तौ च महान्तस्तुल्यसौभगाः ॥

சூரியன் சிவந்தவனாகவே (பற்றுள்ளவனாகவே) உதித்துச் சிவந்தவனாகவே மறைகிறான். செழிப்பிலும், துயரிலும் பெரியோர் ஒரே சீரான பெருமை உள்ளவர்.

197. उद्यमेन हि सिध्यन्ति कार्याणि न मनोरथैः ।

பணிகள் நன்முயற்சியால் மட்டும் நிறைவுறும்; மனக் கோட்டையால் அல்ல.

198. उद्योगः पुरुषलक्षणम् ।

முயற்சிமிக்க ஈடுபாடே மனிதனின் அடையாளம்.

199. उद्योगिनं पुरुषसिंहमुपैति लक्ष्मीः ।

முயற்சியுடன் பணியில் ஈடுபடுகிற உயர்ந்த மனிதனையே லக்ஷ்மி நாடுவாள்.

200. उद्योगे नास्ति दारिद्र्यम् ।

முயற்சியுடன் பணியில் ஈடுபட அங்கு ஏழ்மை இருக்காது.

201. उद्वृत्तः क इव सुखावहः परेषाम् ?

நடத்தை கெட்ட எவன் பிறருக்கு இன்பமளிப்பான்?

202. उन्नतो न सहते तिरस्क्रियाम् ।

மேனிலையடைந்தவன் அவமதிப்பைப் பொறுக்க மாட்டான்.

203. उपकारप्रधानः स्यादपकारपरेऽप्यरौ ।

எதிரி தனக்கு இடையூறு விளைவித்துக் கொண்டேயிருந்தாலும் தான் உதவி செய்வதில் முனைந்திருக்க வேண்டும்.

204. उपकाराय या पुंसां नापरस्य न चात्मनः ।

पत्रसञ्चय संभारैः किं तया भारविद्यया ॥

பிறருக்கோ தனக்கோ உதவாமல் ஏடுகளைத் தொகுப்பதுடன் நின்று சுமையாகிவிட்ட கல்வியால் ஏது பயன்?

205. उपकारोऽप्यनार्येषु न कर्तव्यः ।

உபகாரமும் ஒழுக்கம் கெட்டவனுக்குச் செய்யக் கூடாது.

206. उपकृत्य निसर्गतः परेषां उपरोधं न हि कुर्वते महान्तः ।

இயல்பாகப் பிறருக்கு உதவியபின் அவர்களுக்குப் பெரியோர் இடையூறு விளைவிக்கமாட்டார்.

207. उपदेशपराः परेष्वपि स्वविनाशाभिमुखेषु साधवः ।

பிறர் தாமே தனக்குக் கேடு விளைவித்துக் கொள்வதில் முனைந்தபோதும் நல்லோர் நல்வழி காட்டுவதில் முனைவர்.

208. उपदेशो हि मूर्खाणां प्रकोपाय न शान्तये ।

மூர்க்கனுக்கு வழிகாட்டுவது அவனை வெறிக்கு ஆளாக்கும். அமைதிக்கல்ல.

209. उपस्थित विनाशः पथ्यवाक्यं न शृणोति ।

அழிவை நெருங்குபவன் இதமான நல்வார்த்தையைக் கேட்க மாட்டான்.

210. उपायज्ञोऽल्पकायोऽपि न शूरैः परिभूयते ।

உடல் சிறுத்தவனாயினும் நடைமுறை அறிந்தவனாயின் அவனை சூரர்களும் வெல்ல முடியாது.

211. उपायं चिन्तयन्प्राज्ञो ह्यपायमपि चिन्तयेत् ।

*அறிவாளி எளிய நற்செயல் முறை பற்றி சிந்திக்கும்போதே செயல் முறைப்பிழையால் நேரவிருக்கிற அபாயத்தையும் எதிர் நோக்க வேண்டும்.*

212. उपायेन यत्कुर्यात् तन्न शक्यं पराक्रमैः ।

*வழிமுறையறிந்து செய்ய முடிவதை வன்முறையால் செய்ய இயலாது.*

213. उपायो धीरता च स्तां अपाये आयुधे उभे ।

*நல்லுபாயமும் தைரியமுமே இடுக்கண்ணை எதிர்க்கிற இரு ஆயுதங்கள்.*

214. उपार्जितानां वित्तानां दानमेव हि रक्षणम् ।

*சிறுகச் சிறுகச் சேமித்த செல்வத்திற்குத் தானம் ஒன்றே பாதுகாப்பு.*

215. उपेक्षन्ते न विपदः किं पेलवमपेलवम् ।

*எது இவனால் தாங்கமுடியாதது. எது இவனால் தாங்கக் கூடியது என விபத்துக்கள் தள்ளி நின்று சிந்திக்கமாட்டா.*

216. उप्तं सुकृतबीजं हि सुक्षेत्रेषु महत्फलम् ।

*நற்செயல் என்ற விதை நல்லவயலில் விதைக்கப்பட பெரும் நற்பயனைத் தரும்.*

217. उष्णो दहति चाङ्गारः शीतः कृष्णायते करम् ।

*கரிக்கட்டி சூடானால் பொசுக்கும். சில்லிட்டால் கையைக் கரியதாக்கும்.*

218. ऋजुता सुलभा यस्य स्वार्थं न तु पराहितम् ।

*நேர்மை ஒருவனால் எளிதில் கடைபிடிக்க இயலுமானால் பிறருக்குக் கேடுவிளைவிப்பது அவனது சுயநலமாக இராது.*

219. ऋणकर्ता पिता शत्रुः माता च व्यभिचारिणी ।
अविनीता रिपुर्भार्या पुत्रः शत्रुरपण्डितः ॥

*கடனை வைத்த தந்தை எதிரி, ஒழுக்கம் கெட்ட தாய் எதிரி. அடங்காத மனைவி எதிரி. அறிவற்ற பிள்ளை எதிரி.*

220. ऋण शत्रुव्याधिष्वशेषः कर्तव्यः ।

கடன், எதிரி, நோய் இவற்றை மீதமில்லாமல் செய்ய வேண்டும்.

221. ऋद्धिः चित्तविकारिणी ।

செல்வச் செழிப்பு சித்தத்தைக் குழப்பும்.

222. एकचित्ते द्वयोरेव किमसाध्यं भवेदिह ।

இருவரது மனமும் ஒன்றுகி இணைந்து விட்டால், நடவாதது எது?

223. एकं वृक्षं समारूढा निशि नाना विहङ्गमाः ।
प्रभाते दिक्षु दशसु तत्र का परिदेवना ॥

இரவில் ஒரே மரத்தை வந்தடைந்த பல்வகைப் பறவைகள் விடிந்ததும் பத்து திக்குகளிலும் பறந்து சென்றுவிட்டன. இதில் வருந்த என்ன இருக்கிறது ? (உற்ருர், உறவினர், நண்பர் எனச் சிறிதுநேரம் கூடி வாழ்பவர் இயல்பாகப் பிரியும்போது வருந்துவது ஏன்?)

224. एकाकिनं हन्ति विषं ऋणं पुत्रप्रपौत्रकान् ।

விஷமோ அருந்தியவன் ஒருவனைமட்டும் கொல்லும். கடனோ பிள்ளை பேரன் என எல்லோரையும் கொல்லும்.

225. एको हि दोषो गुणसन्निपाते निमज्जतीन्दोः किरणेष्विवाङ्कः ।

சந்திரனது ஒளி வட்டத்தில் அவனது மரு மறைவதுபோல் சிறப்புகள் எண்ணற்றுக் கூடும்போது ஒரு குறை மறைந்துவிடும்.

226. एति जीवन्तमानन्दो नरं वर्षशतादपि ।

உயிருடனிருந்தால் நூறுண்டுகளுக்குப் பின்னராவது ஆனந்தம் வந்தடையும்.

227. औचित्य रचितं वाक्यं सततं संमतं सताम् ।
त्यागोदग्रमिवैश्वर्यं शीलोज्ज्वलमिव श्रुतम् ॥

இடம் பொருள் ஏவலுக்கேற்ற சொல், தியாகத்தால் ஒளிர்கிற செல்வம், நல்லொழுக்கத்தால் மிளிர்கிற

கல்வியறிவு இவை எப்போதும் நல்லோரால் மதிக்கப் பெறுபவை.

228. क ईप्सितार्थस्थिरनिश्चयं मनः पयश्च निम्नाभिमुखं प्रतीपयेत् ।

நாடியதை அடைவதில் முனைந்துள்ள மனத்தையும், பள்ளத்தை நோக்கிப் பாயும் நீரையும் எவனால் எதிர்த்துத் திசை திருப்பமுடியும்?

229. कण्ठे सुधा वसति वै खलु सज्जनानाम् ।

நல்லோரின் தொண்டையில் (பேச்சில்) அமுதமுள்ளது.

230. कदर्याणां परे प्राणाः प्रायेण ह्यर्थसञ्चयाः ।

உலோபிக்கு வெளியிலுள்ள உயிர் அனேகமாக அவன் சேமித்த செல்வமே.

231. करुणार्द्रा हि सर्वस्य सन्तोऽकारण बान्धवाः ।

கருணையால் இளகிய மனமுள்ள நல்லோர் எல்லோருக்கும் காரணமின்றி பந்துக்களாவர்.

232. कर्तव्यो महदाश्रयः ।

பெரியோர்களை அண்டி நிற்பது அவசியம்.

233. कर्तव्यो लोक सङ्ग्रहः ।

உலகை அணைத்துச் செல்வது அவசியம்.

234. कर्माण्यारभमाणं हि पुरुषं श्रीर्निषेवते ।

(எண்ணத்துடன் நில்லாமல்) செயல் புரியத் தொடங்குபவனிடமே லக்ஷ்மி தங்குவாள்.

235. कल्पवृक्षोऽप्यभव्यानां प्रायो याति पलाशताम् ।

கல்பக விருட்சமாயினும் அதிருஷ்ட மில்லாதவனிடம் புரசமரமாகிவிடும்.

236. कष्टं शिष्टक्षतिकृति कलौ कार्श्यमृच्छन्ति विद्याः ।

கட்டுப்பாடுள்ளவரை அழிக்கின்ற கலியில் வித்தைகளும் இளைத்துவிடும்.

237. कष्टादपि कष्टतरं परगृहवासः परान्नं च ।

*பிறரது இல்லத்தில் தங்குவதும், பிறர் தருகிற உணவும் கொடும் கஷ்டம்.*

238. कस्त्यागः स्वकुटुम्बपोषणविधौ अर्थव्ययं कुर्वतः ?

*தனது குடும்பத்தைப் போஷிப்பதில் பொருளைச் செலவிடுவது தியாகமா? (கடமையல்லவா?)*

239. कस्माद्भयमिह ? मरणात् ।

*இம்மையில் எதனிடமிருந்து பயம்? மரணத்திலிருந்து தானே ?*

240. कस्य नाभ्युदये हेतुः भवेत्साधु समागमः ?

*நல்லோரிணக்கம் யாருக்குத்தான் நன்மைதராது?*

241. कस्य नोच्छृंखलं बाल्यं गुरुशासनवर्जितम् ।

*இளமை பெரியோரின் கட்டுக்குட்படாவிடில் தறிகெட்டலையாதா?*

242. कस्यात्यन्तं सुखमुपनतं दुःखमेकान्ततो वा
नीचैर्गच्छत्युपरि च दशा चक्रनेमिक्रमेण ।

*தனித்து சுகமோ, துக்கமோ எவருக்கு ஏற்படுகிறது? சக்ரம் சுழல்வதுபோல் கீழும் மேலும் நிலை மாறுபடுகிறது.*

243. कः पण्डितः ? विवेकी ।

*எவன் அறிஞன் ? நல்லது கெட்டது பகுத்தறிபவன்.*

244. कः पथ्यतरः? धर्मः ।

*சிறந்த நல்வழி எது? அறவழி.*

245. कः शुचिः इह? यस्य मानसं शुद्धम् ।

*எவன் தூயவன் ? மனத் தூய்மை உள்ளவனே.*

246. का निद्रा ? मूढता जन्तोः ।

*எது தூக்கம்? மனிதனின் அறியாமையே.*

247. कामं व्यसनवृक्षस्य मूलं दुर्जनसंगतिः ।

*துயரமெனும் மரத்தின் வேர் கெட்டவருடன் இணைவதே.*

248. **कामातुराणां न भयं न लज्जा।**

*காம நோய் பிடித்தவனுக்குப் பயமோ, வெட்கமோ இருக்காது.*

249. **कामार्ता हि प्रकृतिकृपणाश्चेतनाचेतनेषु।**

*காமத்தால் துயருற்றவர் அறிவுள்ளது அறிவற்றது என இனம் கண்டறியும் இயல்பு குன்றியவர்களே.*

250. **कार्यकाले नोपनता न सा विद्या न तद्धनम्।**

*உரிய நேரத்தில் பயன் பெறாத கல்வி கல்வியல்ல, செல்வம் செல்வமல்ல.*

251. **कालयुक्त्या ह्यरिर्मित्रं जायते न च सर्वदा।**

*நேரம் நேரும் போது எதிரியும் நண்பனாவான். ஆனால் எப்போது மல்ல.*

252. **काले खलु समारब्धाः फलं बध्नन्ति नीतयः।**

*உரிய நேரத்தில் தொடங்கப் பெற்ற உபாயங்களே பயன் தருகின்றன.*

253. **काले दत्तं वरं ह्यल्पं, अकाले बहुनाऽपि किम्?**

*உரிய வேளையில் சிறிதளவு தந்ததும் பெரிதாகும். வேண்டாத போது அதிக அளவில் தந்தாலும் என்ன பயன்?*

254. **कालेन फलते तीर्थं सद्यः साधुसमागमः।**

*தீர்த்தயாத்திரை பலன் தர நாளாகும். நல்லோரிணக்கம் உடன் நன்மை தரும்.*

255. **कालो हि दुरतिक्रमः।**

*வினை பயன் தரும் வேளையை மீற முடியாது.*

256. **किं कर्म किमकर्मेति कवयोऽप्यत्र मोहिताः।**

*தக்க செயல், தகாத செயல் என வரையறுப்பதில் பேரறிவாளனும் குழம்புவான்.*

257. **किं किं न साधयति कल्पलतेव विद्या?**

*கல்வியறிவு கற்பகக் கொடிபோல் எதனைத்தான் சாதிக்காது?*

258. कि मिह गुरुताया मूलम्? यदेतदप्रार्थनं नाम।

பெருமைக்கு எது அடிப்படை ? பிறரிடம் வேண்டிப் பெறாமை.

259. किं जाड्यम् ? पाटवेऽप्यनभ्यासः।

எது ஜட நிலை? திறமையிருந்தும் செயல் பழகாதது.

260. किं जाड्यम्? पाठतोऽप्यनभ्यासः

எது ஜடநிலை? சொல்லிக் கொடுத்தும் மனத்தில் பதியாதிருப்பது?

261. किं जीवितम् ? अनवद्यम्।

எது நல் வாழ்வு? பிறர் குறை காண முடியாது வாழ்வது.

262. किं जीवितेन पुरुषस्य निरक्षरेण।

எழுத்தறிவில்லாதவன் வாழ்ந்தென்ன பயன்?

263. किं तया गवा, या न क्षरति क्षीरम्। किं तेन प्रसादेन यो न पूरयत्याशाम्?

பால் தராத பசுவால் என்ன பயன்? விரும்பியதை நிறைவு பெறச் செய்யாத பரிவால் என்ன பயன்?

264. किं दुःखम्? असन्तोषः।

துக்கம் எது? மன நிறைவின்மையே.

265. किं पौरुषं रक्षति यो न वार्ताम्।

பிழைப்பைக் காக்காத, திறமையிருந்து என்ன பயன்.

266. किं मनुजेषु इष्टतमम्? स्वपरहितायोद्यतं जन्म।

மனிதரிடத்தில் மிக மிக விரும்பத் தக்கது எது? தனக்கும் பிறருக்கும் நன்மை பயக்கும்படி வாழ்வது.

267. किं लाघवम् ? अधमतो याच्ञा।

எது சிறுமை ? நீசனிடம் வேண்டி நிற்பது.

268. किं वा धनं नार्थिजनाय यत्स्यात्।

தேவையுள்ளவனுக்குப் பயன்படாத செல்வமிருந்து என்ன பயன்?

269. किं वाऽभविष्यदरुणस्तमसां विभेत्ता
तं चेत्सहस्रकिरणो धुरि नाकरिष्यत्।

*ஸுரியன் தனக்கு முன்னதாக அருணனை வைத்திராவிட்டால் அருணன் இருட்டைப் பிளந்து விலக்குபவனுக முடியுமா?*

270. किं विषम् ? अवधीरणा गुरुषु।

*எது விஷம் ? பெரியோரை மதிக்காதிருப்பது.*

271. किं सत्यम्? भूतहितम्।

*எது ஸத்தியம்? உயிரினத்திற்கு நன்மை தருவது.*

272. किं साधयति पाण्डित्यं अस्थाने विनिवेशितम्।

*தவருன இடத்தில் பயன்படுகிற கற்றறிவால் எதைச் சாதிக்க முடியும்?*

273. किं सौख्यम्? अरोगिता जगति जन्तोः।

*எது சுகம்? உலகில் மக்கள் நோயற்றிருப்பதே.*

274. किं सौख्यम्? सर्वसङ्गविरक्तिः या।

*எது சுகம்? எதிலும் பற்றின்மை.*

275. किञ्चित्कालोपयोगीनि यौवनानि धनानि च।

*வாலிபமும் செல்வமும் குறுகிய காலத்தில் பயன்படுபவையே.*

276. किमदेयं उदाराणां उपकारिषु तुष्यताम्।

*பெருமனம் படைத்தவன் தனக்கு ஒருவன் தக்க ஸமயத்தில் உதவியதை உணர்ந்து மகிழ்ந்த நிலையில் திருப்பி எதைத்தான் தரமாட்டான் ?*

277. किमनर्घ्यम् ? दत्तमवसरे यच्च।

*எது விலை மதிக்க முடியாதது? உரிய நேரத்தில் உதவியது.*

278. किमिव हि मधुराणां मण्डनं नाकृतीनाम्।

*இனிய உடலமைப்புள்ளவர்களுக்கு எதுதான் அழகு ஊட்டுகிற அணியாகாது ?*

279. किमिव हि शक्तिहरं ससाध्वसानाम् ।

பட்படப்புடன் செயல் புரிபவனுக்கு எல்லாமே திறமையைக் குலைக்கும்.

280. किमिव अवसादकरं आत्मवताम् ।

மனத்திடமுள்ளவனுக்கு எது களைப்பு தரும் ?

281. किमिवास्ति यन्न सुकरं मनस्विभिः ॥

மன வலிவுள்ளவனுக்குச் செய்ய இயலாதது எதுவுமில்லை.

282. किमु चोदिताः प्रियहितार्थकृतः कृतिनो भवन्ति सुहृदः सुहृदाम् ।

நண்பர்கள் தனக்கு உதவுமாறு தூண்டிய பிறகே நண்பர் விரும்பியதையும் அவர்களுக்கு நல்லதையும் செய்வார்கள் எனில் அப்படி உதவுகிற நண்பர்கள் ஆத்ம திருப்தி பெற முடியுமா?

283. किं उपादेयम् ? गुरुवचनम् ?

எது ஏற்கத் தக்கது? பெரியோரின் சொல்.

284. कुत्र विधेयो यत्नः ? विद्याभ्यासे सदौषधे दाने ।

எதில் முயற்சி தேவை? கல்வி யளிப்பதில், நல்ல மருத்துவமளிப்பதில், பொருள் வழங்குவதில்.

285. कुदेशमासाद्य कुतोऽर्थसञ्चयः कुपुत्रमासाद्य कुतस्तिलाञ्जलिः ।
कुगेहिनीं प्राप्य गृहे कुतः सुखं कुशिष्यमध्यापयतः कुतो यशः ।

வாழவகையற்ற நாட்டில் பொருளீட்டுவதும், கெட்ட பிள்ளையைப் பெற்றவன் (தன் மறைவிற்குப் பின்) எள்ளும் நீரும் கிட்டும் என எதிர் பார்ப்பதும் கெட்ட மனைவியை யடைந்து வீட்டில் சுகம் எதிர்ப்பார்ப்பதும், கெட்ட மாணவனுக்குக் கல்வி புகட்டிப் புகழ் எதிர்ப்பார்ப்பதும் எங்ஙனம் நிறைவேறும்?

286. कुभोज्येन दिनं नष्टं निशा नष्टा कुचिन्तया ।
कुव्याहृतेन वाङ्नष्टा तन्नष्टं यन्न दीयते ॥

கெட்ட உணவால் பகல் வீணானது. தவறான சிந்தனையால் இரவு வீணானது. கெட்ட பேச்சால் வாய் வீணானது. தேவைப்பட்டபோது கொடுக்காததால் பணம் வீணானது.

287. कुरहस्य सहाये हि भृत्ये भृत्यायते स्वामी।

ரகசியமாகத் தான் செய்த கெட்ட செயலில் உதவிய பணியாளிடம் எஜமானன் பணிய நேரும்.

288. कुराजान्तानि राष्ट्राणि कुवाक्यान्तं च सौहृदम्।
कलहान्तानि हर्म्याणि कुकर्मान्तं यशो नृणाम्॥

கெட்ட அரசனுல் தேசம் அழியும். கெட்ட பேச்சால் நட்பு அழியும். கலகத்தால் வீடு அழியும். கெட்ட செயலால் புகழ் அழியும்.

289. कुर्वन्त्यकालेऽभिव्यक्तिं न कार्यापेक्षिणो बुधाः।

அறிவாளிகள் தன் பணி நிறைவுற, தவருன நேரத்தில் முன் வரமாட்டார்.

290. कुर्वन्नेवेह कर्माणि जिजीविषेत् शतं समाः।

இம்மையில் உரிய பணிகளைச் செய்து கொண்டே நூறாண்டுகள் வாழத் திட்டமிட வேண்டும்.

291. कुलाभिमानं त्यज संवृताग्रं धनाभिमानं त्यज दृष्टनष्टम्।
विद्याभिमानं त्यज पण्यरूपं रूपाभिमानं त्यज काललेह्यम्॥

குலச் செருக்கை விடு - அதன் வருங்காலம் மறைந்துள்ளது. செல்வச் செருக்கை விடு - அது கண்ணதிரே மறையும். கல்விச் செருக்கைவிடு - அது விலை கொடுத்து வாங்கக் கூடியது. அழகுச் செருக்கைவிடு - காலம் அதனை விழுங்குமே.

292. कुलीनैः सह संपर्कं पण्डितैः सह मित्रताम्।
ज्ञातिभिश्च समं मेलं कुर्वाणो न विनश्यति॥

நற்குலத்தோருடன் தொடர்பும் அறிவாளிகளுடன் நட்பும், உறவினருடன் கூடுவதும் கொண்டவன் அழியமாட்டான்.

293. कुवस्त्रता शुभ्रतया विराजते।

கந்தலாடையும் அழுக்கின்மையால் அழகாகத் தோன்றுகிறது.

294. कुस्थानस्य प्रवेशेन गुणवानपि पीड्यते ।
वैश्वानरोऽपि लोहस्थः कारुकैरभिहन्यते ॥

தகாத இடத்தில் நுழைவதால் நல்லவனும் தாக்கப் பெறுவான். அக்னி தேவனும் இரும்புத் துண்டில் இருந்தால் கம்மாரரால் சம்மட்டியடி பெறுகிறார்.

295. कृतस्य करणं नास्ति मृतस्य मरणं तथा ।
गतस्य शोचनं नास्ति ह्येतद्वेदविदां मतम् ॥

செய்ததை மறுபடி செய்வதற்கில்லை. இறந்தவன் மறுபடி இறப்பதில்லை. சென்றதைப் பற்றி வருந்துவதற்கில்லை. இதே வேதமறிந்தவரின் நிச்சயம்.

296. कृतघ्ना धनलोभान्धाः नोपकारेक्षणक्षमाः ।

செய் நன்றி மறந்தவர் பணத்தாசையால் குருடாகி செய்த உதவியையும் கருத்தில் கொள்ள மாட்டார்.

297. कृतघ्नाश्चिरसिद्धार्था अपि भ्रश्यन्ति हि ध्रुवम् ।

நன்றி கெட்டவர் வெகு நாட்களின் உழைப்பால் விரும்பியதைப் பெற்றிருந்தும் கட்டாயம் வீழ்ச்சியடைவர்.

298. कृतघ्ने नास्ति निष्कृतिः ।

செய் நன்றி மறந்தவனுக்குக் கழுவாய் கிடையாது.

299. कृतज्ञे सत्परीवारे प्रभौ सेवाऽफला कुतः ।

நன்றியறிவுள்ளவனும் நல்ல சுற்றமுள்ளவனுமான பிரபுவிற்குச் செய்த பணிவிடை வீணாவதில்லை.

300. कृतं व्यतीते समये व्यर्थम् ।

நேரம் கடந்த செயல் வீண்.

301. कृतार्थः स्वामिनं द्वेष्टि कृतदारस्तु मातरम् ।
जातापत्या पतिं द्वेष्टि गतरोगश्चिकित्सकम् ॥

காரியம் முடிந்ததும் எஜமானனை எதிர்ப்பான். திருமணமானதும் தாயை எதிர்ப்பான். குழந்தை பிறந்ததும் கணவனை எதிர்ப்பாள். நோய் நீங்கியதும் மருத்துவரை எதிர்ப்பர்.

302. कृपणानुसारि च धनम् ।

செல்வம் கஞ்சனைப் பின் தொடரும்.

303. कृपणेन समो दाता न भूतो न भविष्यति ।

अस्पृशन्नेव वित्तानि स परेभ्यः प्रयच्छति ॥

கிருபணனைப் போன்ற வள்ளல் இதுவரை தோன்றியது மில்லை. இனி தோன்றப் போவதுமில்லை. அவன்தான் கையால் தொடாமலேயே (இறந்ததும்) அனைத்தையும் பிறருக்கு வழங்குகிறானல்லவா?

304. कृशे कस्यास्ति सौहृदम् ।

இளைத்தவனிடம் எவனுக்குக் கரிசனம் உள்ளது ?

305. के च दस्यवः ? विषयाः ।

எவை திருடர்கள் ? நாம் நாடுகிற பொருள்களே.

306. केचिदज्ञानतो नष्टाः केचिन्नष्टाः प्रमादतः ।

केचिज्ज्ञानावलेपेन केचिन्नष्टैस्तु नाशिताः ॥

அறியாமையில் சிலரும், கவனக் குறைவால் சிலரும், அறிவால் ஏற்பட்டதிமிரால் சிலரும் அழிந்தனர். சிலர் இவ்வாறு அழிந்தவர்களால் அழிக்கப்படுகிறார்கள்.

307. के वा न स्युः परिभवपदं निष्फलारंभयत्नाः ।

பணியின் தொடக்கமும் அதற்கான முயற்சியும் வீணாகும்படி செயல் புரிபவர் அவமதிப்பிற்கிடமாக ஏன் ஆகமாட்டார் ?

308. के शशिनः किरणसमाः? सज्जना एव ।

எவர் நிலவு போன்று மன அமைதி தருபவர்? நல்லோரே.

309. केषां न स्यादभिमतफला प्रार्थना ह्युत्तमेषु ।

நல்லோரிடம் செய்த கோரிக்கை விரும்பியதைத் தருவதாக ஆகாதா?

310. केषां हि नापदां हेतुः अतिलोभान्धबुद्धिता ।

பெரும் பேராசையால் அறிவு குருடான நிலை எவருக்குத் தான் கேடு விளைவிக்காது ?

311. को जागर्ति? विवेकी।

எவன் விழித்திருப்பான்? பகுத்தறிவுள்ளவன்.

312. कोऽतिभारः समर्थानां किं दूरं व्यवसायिनाम्।
को विदेशः सविद्यानां कः परः प्रियवादिनाम्॥

திறமை மிக்கவருக்கு அதிகச் சுமை ஆவது எது? கடும் உழைப்புள்ளவருக்கு எது தூரம்? கல்வியால் சிறந்தவனுக்கு எது வெளி நாடு? அன்புடன் பேசுபவருக்கு மாற்ருன் எவர்?

313. को धर्मः ? भूतदया।

எது கடமை ? ஜீவகாருண்யம்.

314. को न तृप्यति वित्तेन ?

செல்வத்தால் திருப்தி பெருதவன் எவன்?

315. को नरकः? परवशता ।

எது நரகம்? பிறருக்கு அடிமையாயிருப்பது.

316. कोऽन्धो योऽकार्यरतः को बधिरो यः शृणोति नैतानि।
को मूको यः काले प्रियाणि वक्तुं न जानाति॥

எவன் குருடன்? தவருன செயலில் ஈடுபட்டவன். எவன் செவிடு? தவருன செயலென்று குறிப்பிடும் போதும் கேளாதவன். எவன் ஊமை? உரிய நேரத்தில் இனிதாகப் பேச அறியாதவன்.

317. कोऽपवादः स्तुतिपदे यदशीलेषु संपदः।
साधुवृत्तानपि क्षुद्रा विक्षिपन्त्येव संपदः॥

பாராட்டத் தக்கவரைப் பற்றி அவச்சொல்லா? ஒழுக்கம் கெட்டவரிடம் செல்வமா? திடீரென ஏற்பட்ட அற்பச் செழிப்பு நன்னடத்தையுள்ளவரையும் தூக்கி எறியும்.

318. कोऽर्थान् प्राप्य न गर्वितः ?

செல்வம் சேர்ந்தும் செருக்கடையாதவன் எவன்?

319. कोऽर्थी गतो गौरवम् ?

எந்த யாசகன் பெருமையடைந்திருக்கிருன்?

320. कोऽवकाशो विवेकस्य हृदि कामान्धचेतसः ।
காமத்தால் மனம் குருடானவனின் இதயத்தில் பகுத்தறிவிற்கு ஏது இடம்?

321. को वा दुर्जनवागुरासु पतितः क्षेमेण यातः पुमान् ?
கெட்டவனின் வலையில் விழுந்த எவன் நலத்துடன் வாழ்ந்திருக்கிறான்?

322. को वैरी? यस्तु अनुयोगः ।
எவன் எதிரி? முயற்சியின்றி சோம்பித் திரிபவன்.

323. को हि मार्गममार्गं वा व्यसनान्धो निरीक्षते ?
கெட்ட பழக்க முள்ள எவன் தான் செல்லும் வழி நேரானதா நேரல்லாததா என்று உற்று நோக்குகிறான்?

324. को हि स्वशिरसश्छायां विधेश्चोल्लंघयेद्गतिम् ।
தன் தலையின் நிழலையும் விதியின் போக்கையும் தாண்டிச் செல்பவன் எவன்?

325. क्रियासिद्धिः सत्वे भवति महतां नोपकरणे ।
பெரியோர்களின் செயல் நிறைவு, அவர்களின் மன வலிவை ஒட்டியது. சாதனங்களை யல்ல.

326. क्रुद्धे विधौ भजति मित्रं अमित्रभावम् ।
விதி எதிர்க்கும் போது நண்பனும் எதிரியாவான்.

327. क्रोधं तु क्षमया सदा जहि बलात् । लोभं तु सन्तोषतः ।
கோபத்தைப் பொறுமையாலும், பேராசையைக் கிடைத்ததில் மகிழ்ச்சியாலும் எப்போதும் அடக்குவாய்.

328. क्रोधः सुदुर्जयः शत्रुः लोभो व्याधिरनन्तकः ।
सर्वभूतहितः साधुः असाधुर्निर्दयः स्मृतः ॥
கோபம் எளிதில் வெல்ல இயலாத எதிரி. பேராசை தீராநோய். எல்லா உயிரினத்திற்கும் நன்மை புரிபவனே நல்லவன். பரிவில்லாதவன் கெட்டவன்.

329. क्रोधः खलु बोधस्य सुमहान् अवरोधः ।
கோபம் அறிவிற்குப் பெருந்தடை.

330. क्लेशः फलेन हि पुनर्नवतां विधत्ते ।

உழைப்பால் ஏற்பட்ட களைப்பு பயன் கண்டதும் நீங்கும். புத்துணர்ச்சி வரும்.

331. क्षणशः कणशश्चैव विद्यामर्थं च साधयेत् ।

நொடிக்கு நொடி சிறு சிறு துளியாக கல்வியையும், பொருளையும் சேமிக்க வேண்டும்.

332. क्षणे क्षणे यन्नवतामुपैति तदेव रूपं रमणीयतायाः ।

நொடிக்கு நொடிப் புதுப் புது தோற்றம் பெறுவதே அழகின் சிறப்பு.

333. क्षमन्ते न विचारं हि मूर्खा विषयलोलुपाः ।

வெளிப் பொருள் நாட்டம் மிக்க முட்டாள் பகுத்தறிவதைப் பொறுக்கமாட்டான்.

334. क्षमा खड्गः करे यस्य दुर्जनः किं करिष्यति ।

பொறுமை எனும் கத்தியைக் கையில் ஏந்தியவனை துஷ்டன் என்ன செய்யமுடியும்?

335. क्षमातुल्यं तपो नास्ति न सन्तोषात्परं सुखम् ।

न तृष्णायाः परो व्याधिः न च धर्मो दयापरः ॥

பொறுமைக்கீடான தவமும், மன நிறைவிற்கீடான சுகமும், பேராசைக்கு நிகரான நோயும், தயையைவிடப் பெரிய தர்மமும் இல்லை.

336. क्षारं पिबति पयोधेः वर्षत्यंभोधरो मधुरमंभः ।

கடலின் உப்புநீரைக் குடித்து மேகம் இனிய நீரைப் பொழிகிறது.

337. क्षीणोऽपि न त्यजति शीलगुणान् कुलीनः ।

நொடித்த நிலையிலும் நற்குலத்துதித்தவன் ஒழுக்கத்தைக் கைவிடமாட்டான்.

338. क्षुद्रेऽपि नूनं शरणं प्रपन्ने ममत्वमुच्चैः शिरसां सतीव ।

தன்னைப் புகலிடமாக அடைந்தவன் அற்பனுயினும் நல்லோருக்கு அவன் தன்னைச் சார்ந்தவன் என்ற அபிமானமிருக்கும்.

339. क्षुधातुराणां न रुचिर्न वेला (पक्कं) विद्यातुराणां न सुखं न निद्रा ॥

பசியால் துன்புற்றவனுக்கு சுவையோ, வேளையோ (பக்வமோ) இல்லை. கல்வி பற்றிக் கவலைப் படுபவனுக்கு சுகமோ, துக்கமோ இல்லை.

340. खलः सर्षपमात्राणि परच्छिद्राणि पश्यति ।
आत्मनो बिल्वमात्राणि पश्यन्नपि न पश्यति ॥

துஷ்டன் கடுகளவுள்ள பிறர் குறையைக் கண் காணிப்பான். வில்வக் காயளவு பெரியதன் குறையைக் காணாதிருப்பான்.

341. गतानुगतिको लोको न लोकः पारमार्थिकः ।

மனித இயல்பு முன் செல்பவரைக் குருட்டுத் தனமாகப் பின் தொடரும். உண்மை நிலை கண்டறியாது.

342. गतेऽपि वयसि ग्राह्या विद्या सर्वात्मना बुधैः ।
यद्यपि स्यान्न फलदा सुलभा साऽन्यजन्मनि ॥

வயது கடந்த பின்னும் கட்டாயமாகக் கல்வி பெற வேண்டும். இப்பிறப்பில் பயன்படாவிடினும் மறு பிறவியில் எளிதில் அது கிட்டும்.

343. गुणान्भूषयते रूपं शीलं भूषयते कुलम् ।
सिद्धिर्भूषयते विद्यां भोगो भूषयते धनम् ॥

குணச் சிறப்பை அழகும், குலத்தை ஒழுக்கமும், கல்வியை அறிவும், செல்வத்தை அதன் அனுபவ இன்பமும் அழகுபடுத்தும்.

344. गुरुशुश्रूषया विद्या पुष्कलेन धनेन वा ।
अथवा विद्यया विद्या चतुर्थी नोपलभ्यते ॥

குருவின் பணிவிடையாலோ, நிறையச் செல்வமளித்தோ, கற்பதில் ஆர்வத்தாலோ கல்வியைப் பெறலாம். நான்காம் உபாயம் ஏதுமில்லை.

345. गुरुतां नयन्ति हि गुणा न संहतिः ।

குணங்களே பெருமைக்கு இட்டுச் செல்பவை. கூட்டமல்ல.

346. गुर्वपि विरहदुःखं आशाबन्धः साहयति ।

பிரிவால் ஏற்படும் கொடிய துயரத்தையும் மறுபடி சேர்வோம் என்ற எதிர்ப்பார்ப்பு பொறுத்துக் கொள்ளச் செய்கிறது.

347. गृहानुपैतुं प्रणयादभीप्सवो भवन्ति नापुण्यकृतां मनीषिणः ।

அறிவாளிகள் அன்புடன் பாபிகளின் வீட்டில் நுழைய விரும்புவதில்லை.

348. ग्रहीतुमार्यान्परिचर्यया मुहुः महानुभावा हि नितान्तमर्थिनः ।

நல்லெண்ணமுள்ளவர் பெரியோருக்குப் பணிவிடை புரிந்து தமக்கு அவர்களை அனுகூலமாக்குவதையே பெரிதும் விரும்புவர்.

349. ग्रावाणोऽप्यार्द्रतां सम्यग्भजन्त्यभिमुखे विधौ ।

விதி அனுகூலமாக இருக்கையில் கற்களும் கசியும்.

350. चक्रवत्परिवर्तन्ते दुःखानि च सुखानि च ।

துன்பமும் இன்பமும் சக்கிரம் போல் சுற்றிவரும்.

351. चक्षुःपूतं न्यसेत्पादं वस्त्रपूतं जलं पिबेत् ।
सत्यपूतां वदेद्वाणीं मनःपूतं समाचरेत् ॥

கண்ணால் தூய்மை உணர்ந்து காலடி வைப்பாய். துணியால் வடிக்கட்டி நீர் பருகுவாய். உண்மையால் தூய்மை பெற்ற பேச்சைப் பேசுவாய். மனத்தால் தூய்மையுணர்ந்து பழகுவாய்.

352. चत्वारो धनदायादाः धर्माग्निनृपतस्कराः ।
तेषां ज्येष्ठावमानेन त्रयः कुप्यन्ति बान्धवाः ॥

செல்வத்திற்கு நான்கு சுற்றத்தினர். தர்மம், அக்னி, அரசன், திருடன் என. தர்மமே மூத்தவர். மூத்தவரை அவமதித்தால் மற்ற மூவரும் கோபமடைவர்.

353. चलत्येकेन पादेन तिष्ठत्येकेन पण्डितः ।
नासमीक्ष्य परं स्थानं पूर्वमायतनं त्यजेत् ॥

ஒரு காலே ஊன்றி மற்ற காலே வைத்து அறிவாளி நடப்பான். அடிவைக்க வேண்டிய இடத்தை உற்று நோக்காமல் முன்னிருந்த இடத்தை விட்டுப் பெயரக் கூடாது.

354. चिन्तनीयं हि विपदामादावेव प्रतिक्रिया।
न कूपखननं युक्तं प्रदीप्ते वह्निना गृहे॥

ஆபத்துவருமுன்னரே அதற்கான எதிர் நடவடிக்கை பற்றி யோசிக்க வேண்டும். வீடு நெருப்பு பிடித்து எரிந்த பின் கிணறு வெட்டுவது தகுந்ததல்ல.

355. जननी जनकश्चैव जाह्नवी च जनार्दनः।
जन्मभूमिः पञ्चमी च जकाराः पञ्च पूजिताः॥

ஜநநீ (தாய்), ஜநகர் (தந்தை), ஜாந்ஹவீ (கங்கை), ஜநார்தநர் (நாராயணர்), ஜன்மபூமி (தாய் நாடு) என ஐந்து 'ஜ'வை முதல் எழுத்தாகக் கொண்டவர்கள் வழிபாடு பெற்றவர்கள்.

356. जननी जन्मभूमिश्च स्वर्गादपि गरीयसी।

தாயும் தாய் நாடும் ஸ்வர்க்கத்தைவிட பெருமைமிக்கவை.

357. जनस्याशयमालक्ष्य यो यथा परितुष्यति।
तं तथैवानुवर्तेत पराराधनपण्डितः॥

பிறரது மனம் திருப்தியடையச் செய்வதில் தேர்ந்தவனுக மக்களின் நோக்கத்தைக் கண்டுபிடித்து அவனவன் மகிழும்படி அனுகூலமாக நடக்க வேண்டும்.

358. जरया जीर्णं न जीर्णं, उदरेण जीर्णं न जीर्णं, मनसा जीर्णमेव जीर्णम्।

வயதின் முதுமையால் உருவிழந்ததோ, வயிற்றினுட் சென்றதால் செரித்ததோ ஜீர்ணமானதல்ல. மனத்தால் ஏற்கப்பட்டுச் சுய உணர்வானதே ஜீர்ணம்.

359. जातिमात्रेण यः कश्चिद्धन्यते पूज्यते क्वचित्।
व्यवहारं परिज्ञाय वध्यः पूज्योऽथवा भवेत्॥

இனத்தைக் கொண்டே ஒருவன் தண்டிக்கப் பெறுவதோ பாராட்டப் பெறுவதோ சில இடத்தில் நடைபெறலாம். அவனவனது நடைமுறையைக் கொண்டு தண்டிக்கப் பெறுவதோ பாராட்டப் பெறுவதோ நடைபெற வேண்டும்.

360. तपोऽधीनानि श्रेयांसि ह्युपायोऽन्यो न विद्यते।

கடும் உழைப்பை யொட்டியே மேன்மைகள் ஏற்படும். வேறு உபாயம் இல்லை.

361. तर्के नैवास्ति निश्चयः।

வாதங்களில் தீர்மானம் ஏற்படுவதில்லை.

362. तस्य तदेव हि मधुरं यस्य मनो यत्र संलग्नम्।

அவனவனது மனத்தை ஈர்த்த பொருளே அவனவனுக்கு இனியது.

363. तिलमात्रमप्युपकारं शैलवन्मन्यते साधुः।

எள்ளளவு செய்த உதவியை மலை போல் நல்லவர் மதிப்பர்.

364. तेजसां हि न वयः समीक्ष्यते।

பேராற்றல் மிக்கவருடைய வயது முக்கியமாகக் கொள்ளப்படுவதில்லை.

365. त्रिवर्गशून्यं नारंभं भजेत्तं चाविरोधयन्।

अनुयायात्प्रतिपदं सर्वधर्मेषु मध्यमाम्॥

அறம் பொருள் இன்பம் என்ற மூன்றிற்கும் பயன்படாத எந்தப் பணியையும் தொடங்கக் கூடாது. இம்மூன்றிற்கும் விரோதமின்றி எல்லாப் பணிகளிலும் நடுநிலை நின்று ஒவ்வொரு அடியையும் வைக்க வேண்டும்.

366. दातृत्वं प्रियवक्तृत्वं धीरत्वं उचितज्ञता।

अभ्यासेन न लभ्येरन् चत्वारः सहजाः गुणाः॥

பிறருக்கு அளிப்பது, இனிய பேச்சு, தைர்யம், உசிதமறிதல் இவை நான்கும் கூடப் பிறந்த குணங்கள். பழக்கத்தால் வருபவையல்ல.

367. दानं सत्वाश्रितं कुर्यात् न पश्चात्तापवान् भवेत्।

கொடுப்பதை மனமொப்பிக் கொடுக்க வேண்டும். பிறகு அது குறித்து நோகக் கூடாது.

368. दुरधीता विषं विद्या।

முறை தவறிக்கற்ற கல்வி விஷமாகும்.

369. दुर्गेषु दीनानामभिपत्ता, क्रुद्धानामनुनेता, भीतानामाश्वासयिता स्यात्।

நெருக்கடியில் துயரடைந்தவருக்குத் துணையாக, கோபமடைந்தவரை ஸமாதானப் படுத்துபவராக, பயந்தவருக்கு நம்பிக்கை தருபவராக இருத்தல் வேண்டும்.

370. दुर्जनस्यार्जितं वित्तं भुज्यते राजतस्करैः।

கெட்ட மனிதன் சேமித்த செல்வம் அரசராலும் திருடராலும் அனுபவிக்கப் பெறும்.

371. दुर्लभः स गुरुर्लोके शिष्यहृत्ता(चिन्ता)पहारकः।

சீடனின் மனக் கொதிப்பை (மனத்திலுள்ள ஐயத்தை)ப் போக்குகிற குரு கிடைப்பது அரிது.

372. दुःखेन श्लिष्यते भिन्नं श्लिष्टं दुःखेन भिद्यते।
भिन्नश्लिष्टा हि या प्रीतिः सा दुःखैकप्रदायिनी॥

நன்கு பிரிந்ததை இணைப்பது கடினம். இணைந்ததைப் பிரிப்பதும் கடினம். பிரிந்தபின் இணைந்த அன்பு துக்கத்தையே தரும்.

373. देहपातमपीच्छन्ति सन्तो नाविनयं पुनः।

உடலழிவதையும் நல்லவர் விரும்பி ஏற்பர். வழி தவறிய செயலை யல்ல. (கட்டுப்பாடின்மையை அல்ல).

374. दैवं दुरतिक्रमं नु बलिभिरपि।

வலிவு மிக்கவராலும் விதி மீற முடியாதது.

375. देहप्रवृत्तिर्या काचित् विद्यते परपीडया।
स्त्रीभोगस्तेयहिंसाद्या तस्या वेगान्विधारयेत्॥

பிறரைத் துன்புறுத்தித் தான் சுகம் பெற ஏற்படுகிற உடலுணர்வையும் பெண்ணை பலாத்காரத்துடன் அனுபவிப்பது, திருட்டு, ஹிம்ஸை முதலானவைகளையும் கட்டாயம் தடுத்து அடக்க வேண்டும்.

376. देहवाक्चेतसां चेष्टाः प्राक् श्रमाद्विनिवर्तयेत्।

உடல் வாக்கு மனம் இவற்றின் செயல்களைக் களைப்பு ஏற்படுவதற்கு முன்னரே நிறுத்தவேண்டும்.

377. द्यूतं पुस्तकवाद्ये च नाटकेषु च सक्तता ।
कामस्तन्द्रा च निद्रा च विद्याविघ्नकराणि षट् ॥

சூதாட்டம், வேறு புத்தகப் படிப்பு, வாத்யம், நாடகத்தில் ஆர்வம், காமம், சோம்பல், தூக்கம் இவை ஆறும் கல்விக்கு இடையூறு விளைவிப்பவை.

378. द्वाविमौ पुरुषौ लोके न भूतौ न भविष्यतः ।
प्रार्थितं यश्च कुरुते यश्च नार्थयते परम् ॥

பிறர் கோரியதை நிறைவுறச் செய்பவன், பிறரிடம் எதனையும் கோராதவன் என்ற இருவர் இதுவரை உலகில் தோன்றவுமில்லை. இனித்தோன்றப் போவதுமில்லை.

379. द्वाविमौ पुरुषौ लोके सुखिनौ न कदाचन ।
यश्चाधनः कामयते यश्च कुप्यत्यनीश्वरः ॥

ஏழை, ஆனால் ஆசைப்படுபவன், எதற்கும் சக்தியற்றவன், ஆனால் கோபம் கொள்பவன். இவ்விருவரும் என்றும் சுகம் பெறுவதில்லை.

380. द्वाविमौ पुरुषौ लोके स्वर्गादुपरि तिष्ठतः ।
प्रभुश्च क्षमया युक्तः दरिद्रश्च प्रदानवान् ॥

எல்லாம் வல்லவன், ஆனால் பொறுமையுள்ளவன், ஏழை ஆனால் வாரி வழங்குபவன் என இவ்விருவரும் ஸ்வர்கத்தைத் தாண்டி நிற்பவர்.

381. धर्मतो भ्रष्टः सर्वतो भ्रष्टः ।

அறவழியில் தவறியவன் எல்லாவற்றிலும் தவறி விழுவான்.

382. धर्मस्य कलाः ज्येष्ठाः भूतदया परोपकारश्च ।
दानं क्षमाऽनसूया सत्यमलोभः प्रसादश्च ॥

உயிரினத்திடம் பரிவு, பிறருக்கு உதவுதல்,தானம், பொறுமை, அசூயையின்மை, உண்மை பேசுதல், பேராசையின்மை, மனத்தெளிவு இவை தர்மத்தின் கோலங்கள்.

383. धर्मार्थकाममोक्षाणां यस्यैकोऽपि न विद्यते।
अजागल स्तनस्येव तस्य जन्म निरर्थकम् ।।

அறம் பொருள் இன்பம் முக்தி என்ற நான்கில் ஒன்று கூட இடம் பெறாதவனின் வாழ்க்கை ஆட்டுக்கழுத்தில் முலை போன்று தொங்கும் சதைபோல் பயனற்றது.

384. धर्मार्थौ यत्र न स्यातां शुश्रूषा वापि तद्विधा।
तत्र विद्या न वक्तव्या शुभं बीजमिवोषरे ।।

கடமையுணர்வும் பெற்ற பொருளைக் காக்கும் திறமையும் அவற்றை அறிவதற்கான ஆர்வமுமில்லையெனில் அவனுக்குக் கல்வி வழங்குவது நல்ல விதையை உவர் மண்ணில் விதைப்பது போல் வீணே.

385. धिक् जीवितं शास्त्रकलोज्झितस्य धिक् जीवितं चोद्यमवर्जितस्य।
धिक् जीवितं व्यर्थमनोरथस्य धिक् जीवितं ज्ञाति पराजितस्य ।।

சாஸ்திரம் அல்லது கலை கல்லாதவன், உழைப்பதில் ஆர்வமில்லாதவன், வீணாக மனக்கோட்டை கட்டுபவன், உற்றார் உறவினரிடம் தோற்றவன் இவர்களது வாழ்க்கை வீண்.

386. न कश्चिदात्मनः शत्रुं नात्मानं कस्यचिद्रिपुम्।
प्रकाशयेत्, नापमानं न च निःस्नेहतां प्रभोः ।।

இவன், தனக்கு எதிரி என்றோ, இவனுக்கு தான் எதிரி என்றோ விளம்பரப்படுத்தக் கூடாது. தனக்கு நேர்ந்த அவமானத்தையும் தன் யஜமானன் தன்னிடம் அன்புடன் நடவாததையும் வெளிப்படுத்தக் கூடாது.

387. न कश्चिदपि जानाति किं कस्य श्वो भविष्यति।
अतः श्वः करणीयानि कुर्यादद्यैव बुद्धिमान् ।।

நாளை என்ன நடக்கவிருக்கிறது என எவரும் அறியார். அதனால் நாளைசெய்யவேண்டியதை இன்றே அறிவாளி செய்வான்.

388. न कार्यकालमतिपातयेत्।

செயல் படவேண்டிய வேளையைத் தள்ளிப்போடக்கூடாது.

389. नक्तं सेवेत न द्रुमम् । तथा चत्वर चैत्यान्तश्चतुष्पथ सुरालयान् ।
सूनाटवी शून्यगृह श्मशानानि दिवापि न ।
இரவில் மரத்தடி, குறுக்குப் பாதை, கல்லறை, நாற்சந்தி, கோயில் இவற்றில் தங்காதே. கசாப்பு, காடு, பழையவீடு, மயானம், இவற்றில் பகலிலும் தங்காதே.

390. नक्रः स्वस्थानमासाद्य गजेन्द्रमपि कर्षति ।
स एव प्रच्युतः स्थानात् शुनापि परिभूयते ॥
முதலை தன்னிடத்திலிருக்கும்போது பெரும் யானையையும் இழுக்கும். தன்னிடமகன்றால் நாயாலும் அவமதிக்கப் பெறும்.

391. न खलु स उपरतः यस्य वल्लभो जनः स्मरति ।
அன்புக்குகந்தவரின் நினைவிலுள்ளவரை ஒருவன் இறக்கவில்லை.

392. न गणस्याग्रतो गच्छेत् सिद्धे कार्ये समं फलम् ।
यदि कार्य विपत्तिः स्यात् मुखरस्तत्र हन्यते ॥
கூட்டத்தில் முன் செல்லாதே. கார்யம் பலித்தால் கிட்டும் பயன் ஒரேவிதம். கார்யம் கெட்டிடில் முன் நிற்பவன் அடிபடுபவான்.

393. न चञ्चलं मनोऽनुभ्राम्येत् ।
சலன இயல்புள்ள மனத்தை ஒட்டித் தானும் சுழலக் கூடாது.

394. न च विद्यासमो बन्धुः न च व्याधिसमो रिपुः ।
கல்வியைப் போன்ற உற்றாரோ நோயைப் போன்ற எதிரியோ இல்லை.

395. न चातिदीर्घसूत्री स्यात् । न क्रोधहर्षावनु विदध्यात् ।
செயல் புரிகிற நேரத்தை மிகவும் தள்ளிப்போடக் கூடாது; கோபத்தையோ சந்தோஷத்தையோ ஒட்டி உடன் செயல்புரியக் கூடாது.

396. न ज्ञातुं नाप्यवज्ञातुं नेक्षितुं नाप्युपेक्षितुम् ।
स्वजनः स्वजने जातं विपत्पातं समीहते ॥

தன் மக்கள் மீது ஆபத்து நேர்வதை உணரவோ, உணராமல் இருக்கவோ, காணவோ, உதாசீனப்படுத்தவோ சுற்றத்தான் ஒப்பமாட்டான்.

397. न दरिद्रस्तथा दुःखी लब्धक्षीणधनो यथा।

பெற்றபின் தனத்தை இழந்தவனைப் போல் தனமே இல்லாத ஏழை வருந்த மாட்டான்.

398. नदीं तरेन्न बाहुभ्यां नाग्निस्कन्धमभिव्रजेत्।

ஆற்றைக் கைகளால் கடக்கக் கூடாது. தீச்சூழலை நோக்கிப் போகக் கூடாது.

399. न देवा यष्टिमादाय रक्षन्ति पशुपालवत्।
यं तु रक्षितुमिच्छन्ति बुद्ध्या संयोजयन्ति तम्॥

தேவர்கள் ஒருவனைக் காக்க விரும்பினால் தடி கொண்டு இடையனைப் போல் மிரட்டி வழிகாட்ட மாட்டார்கள். எவரைக் காக்க விரும்புகின்றனரோ அவனுக்கு நல்லறிவைத் தருவர்.

400. न द्विषन्ति न याचन्ते परनिन्दां न कुर्वते।
अनाहूता न चायान्ति तेनाश्मानोऽपि देवताः॥

ஒருவரிடம் விரோதம் பாராட்டமாட்டார். பிறரிடம் யாசிக்க மாட்டார். பிறரை நிந்திக்கமாட்டார். கூப்பிட்டால் வரமாட்டார் என்பதால் இறைவனும் கல்லானார்.

401. न धर्मवृद्धेषु वयः समीक्ष्यते।

தர்மத்தால் வளர்ச்சி பெற்றவரிடம் வயது மதிக்கப் படுவதில்லை.

402. न च वक्तृविशेषनिःस्पृहाः गुण गृह्या वचने विपश्चितः।

பேசுபவர் யார் என்பதில் ஆர்வமின்றி பேசப் பெறுகிற பொருளின் சிறப்பையே அறிவாளிகள் மதிப்பர்.

403. नन्दित एव प्रसीदति खलः।

போக்கிரி பாராட்டப் பெறுவதால் மட்டுமே அனுகூலமாவான்.

404. न पर धन लुब्धता भवेच्छान्त्यै ।
*பிறரது பொருளில் பேராசை அமைதிக்குப் பயன் படாது.*

405. न पादपोन्मूलन शक्तिरंहः शिलोच्चये मूर्च्छति मारुतस्य ।
*மரத்தைப் பெயர்ப்பதில் உள்ள காற்றின் வேகம் கற்குவியலில் வலிவிழக்கிறது.*

406. न पीडयेदिन्द्रियाणि न चैतान्यतिलालयेत् ।
*இந்திரியங்களைத் துன்புறுத்தவும் கூடாது. அதிகமாக லாலனையும் செய்யக் கூடாது.*

407. न बुद्धीन्द्रियाणां अति भारमादध्यात् ।
*அறிவிற்கும் இந்திரியங்களுக்கும் அதிகச் சுமைதரக் கூடாது.*

408. नयवर्त्मगाः प्रभवतां हि धियः ।
*எல்லாம் வல்லவரின் அறிவு நேர் வழியில் செல்லும்.*

409. नरः प्रत्युपकारार्थी विपत्तिमभिवाञ्छति ।
*தனக்கு உதவியவனுக்குத் திருப்பி உதவ முன் உதவியவன் விபத்துக்குள்ளாவதை எதிர்பார்க்கிறான்.*

410. नलिनीगतजलवत्तरलं किम्? यौवनं धनं च आयुः ।
*தாமரை இலைமேல் உள்ள நீர் போல் நிலை கொள்ளாதது எது? வாலிபமும், செல்வமும், ஆயுளும்.*

411. न विवेको विना ज्ञानम् ।
*அறிவில்லாவிடில் பகுத்தறிவில்லை.*

412. नवे वयसि यः शान्तः स शान्तः सद्भिरुच्यते ।
धातुषु क्षीयमाणेषु शान्तिः कस्य न जायते ॥
*இளம் வயதில் மனமடங்கியவனே சாந்தியுள்ளவன். முதுமையால் உடல் வலிவிழந்த நிலையில் சாந்தி எவருக்கு வராது?*

413. न शोकमनुवसेत् । न सिद्धौ उत्सेकं गच्छेत् । नासिद्धौ दैन्यम् ।
*சோகத்தில் ஆழ்ந்து விடக் கூடாது. வெற்றியில் செருக்கும் தோல்வியில் நொந்து கொள்வதும் கூடாது.*

414. न स्वेच्छं व्यवहर्तव्यं आत्मनो भूतिमिच्छता।

தனது மேன்மையை விரும்புபவன் தன்னிச்சையாகச் செயல்படக் கூடாது.

415. न हि विचलति मैत्री दूरतोऽपि स्थितानाम्।

நட்பு துாரத்திலிருப்பதால் குலேயாது.

416. न हि सर्वः सर्वं जानाति।

எல்லோரும் எல்லாவற்றையும் அறிவதில்லே.

417. न हि इङ्गितज्ञः अवसरे विषीदते।

பிறர் மனநிலே உணர்ந்தவன் நெருக்கடியில் தளர்வதில்லே.

418. न हि सत्वावसादेन स्वल्पाप्यापद् विमुच्यते।

மனம் தளர்வதால் ஆபத்து சிறிதும் விலகாது.

419. न हीदृशं संवननं त्रिषु लोकेषु विद्यते।
दया मैत्री च भूतेषु दानं च मधुरा च वाक्॥

தயை, அனேவரிடமும் நட்பு, தானம், இனிய பேச்சு இவற்றைவிடச் சிறந்து மனத்தைக் கவர்வது மூவுலகிலும் எதுவுமில்லே.

420. नाग्निं मुखेनोपधमेत्, नावाक्शिराः शयीत।

வாயால் நெருபபை ஊதக் கூடாது. தலே தாழப் படுக்கக் கூடாது.

421. नाङ्गैः श्लेष्टेत विगुणं, नासीत उत्कटकस्थितः।

உடலுறுப்புகளே இயல்பிற்கு மாருகச் செயல்படுத்தக் கூடாது. குந்தி அதிகநேரம் உட்காரக் கூடாது.

422. नान्यद् देवार्चने कर्म कुर्यात् धावेन्न वर्षति।

தெய்வ வழி பாட்டின்போது வேறு செயல் செய்யக் கூடாது. மழை பெய்யும் போது ஓடக் கூடாது.

423. नाधर्मः चिरमृद्धये।

அறவழி மீறுவது நீண்ட செழிப்பைத் தராது.

424. नानृतात्पातकं परम्।

பொய்யைப் போன்று பெரும் பாபமில்லை.

425. नापरीक्षितमभिनिविशेत्। नेन्द्रियवशगः स्यात्।

சோதித்துப் பார்க்காமல் ஒன்றில் ஆழ்ந்து இறங்கக் கூடாது. இந்திரியங்களின் வசத்தில் செயல்படக் கூடாது.

426. नारभेतान्यसामर्थ्यात् पुरुषः कार्यमात्मनः।
मतिसाम्यं द्वयोर्नास्ति कार्येषु कुरुनन्दन॥

பிறரது திறமையை நம்பிச் செயலைத் தொடங்கக் கூடாது. பணியில் இருவரது கணிப்பும் ஒத்துப் போகாது.

427. नालसाः प्राप्नुवन्त्यर्थान् न शठान्न च मायिनः।
न च लोकरवाद्भीताः न च शश्वत्प्रतीक्षिणः॥

சோம்பேறியோ அடம்பிடிப்பவனோ, வஞ்சகனோ, மக்களின் கூக்குரலுக்குப் பயப்படுபவனோ, உடனுக்குடன் பலனை எதிர்பார்ப்பவனோ பொருளைப் பெறமுடியாது.

428. नाल्पीयान् बहु सुकृतं हिनस्ति दोषः।

சின்னஞ் சிறு குறை பெரும் நற்செயலைப் பாதிக்காது.

429. नासद्भिः किञ्चिदाचरेत्।

கெட்டவருடன் இணைந்து எதனையும் செய்யக் கூடாது.

430. नासंवृतमुखः कुर्यात् क्षुतिहास्यविजृंभणम्।
नासिकां न विकुष्णीयात् नाकस्माद्विलिखेद्भुवम्॥

வாயை மூடிக்கொள்ளமால் தும்மல் சிரிப்பு, கொட்டாவி இவற்றை வெளிப்படுத்தக் கூடாது. மூக்கைக் காரணமின்றி நோண்டக் கூடாது. பூமியைக் கீறக் கூடாது.

431. नास्ति कामसमो व्याधिः नास्ति मोहसमो रिपुः।
नास्ति क्रोध समो वह्निः नास्ति ज्ञानमयं सुखम्॥

காமத்திற்கு ஈடான நோயோ, மோகத்திற்கு ஈடான எதிரியோ, கோபத்திற்கு ஈடான நெருப்போ, அறிவிற்கு ஈடான இன்பம் தருவதோ இல்லை.

432. नास्ति देहिनां सुखदुःखाभावः ।

மக்களுக்கு சுகமும், துக்கமும் இல்லாத நிலை கிடையாது.

433. नास्ति मेघसमं तोयं नास्ति चात्मसमं बलम् ।

नास्ति चक्षुःसमं तेजः नास्ति चान्नसमं प्रियम् ॥

மேகத்திற்குச் சமமான நீரில்லை. சுய வலிவிற்கு ஈடான வலிவில்லை. கண்ணைப் போன்று ஒளியில்லை. உணவைப் போன்று இனியதில்லை.

434. नेक्षेतोद्यन्तमादित्यं नास्तं यन्तं कदाचन ।

नेक्षेत प्रततं सूक्ष्मदीप्तामेध्याप्रियाणि च ॥

உதிக்கிற சூரியன், மறைகிற சூரியன், பரவிய பெரு வெளிச்சம், மிகச் சிறிய ஒளி, கூர்மையாகப் பாய்கிற ஒளி, அமங்களமான ஒளி, மனத்திற்குப் பிடிக்காத ஒளி, இவற்றை உற்று நோக்கக் கூடாது.

435. नैकः सुखी न सर्वत्र विश्रब्धो न च शङ्कितः।

தனித்திருப்பவனும் எல்லாவற்றையும் நம்புபவனும் எதிலும் ஐயப்படுபவனும் இன்பம் பெறமாட்டான்.

436. नो गुरवोऽनेहसो नयन्ति मुधा ।

பெரியோர் நேரத்தை வீணே கழிக்கமாட்டார்.

437. नोदन्वानर्थितामेति सदांभोभिः प्रपूर्यते ।

आत्मा तु पात्रतां नेयः पात्रमायान्ति संपदः ॥

நீரைக் கடல் கோரிப் பெறுவதில்லை. எப்போதும் நீரால் அது நிரப்பப்படுகிறது. தன்னைத் தகுந்தவனுக்கிக் கொள்ள வேண்டும். தகுதியுள்ளவனைச் செல்வம் தானே சென்றடைகிறது.

438. नोर्ध्वजानुश्चिरं तिष्ठेत्, न भारं शिरसा वहेत् ।

முழங்காலை மேல் தூக்கி வெகு நேரம் இருக்கக் கூடாது. தலையால் பெருஞ் சுமை சுமக்கக் கூடாது.

439. पठतो नास्ति मूर्खत्वं जपतो नास्ति पातकम् ।

मौनिनः कलहो नास्ति न भयं चास्ति जाग्रतः ॥

கற்பவனுக்கு அறியாமை இல்லை. ஜபிப்பவனுக்குப் பாபமில்லை. மௌனமிருப்பவனுக்குக் கலகமில்லை. விழித்திருப்பவனுக்குப் பயமில்லை.

440. पदस्थितस्य पद्मस्य मित्रे वरुण भास्करौ।
पदच्युतस्य तस्यैव क्लेददाहकरावुभौ ॥

தாமரை தன் காலில் நிற்கும் வரை வருணனும், சூரியனும் நண்பர்கள். தன் நிலை தவறினால் அவ்விருவருமே வாடவும், உலரவும் காரணமாகின்றனர்.

441. परार्तिशमनं वित्तं अज्ञातमनुदीरितम्।
अफलाकांक्षया युक्तं प्रयात्यल्पमनल्पताम् ॥

பிறர் அறியாமல் விளம்பரப் படுத்தாமல் ப்ரதிபலனை எதிர்பாராமல் பிறரது துயரைத் துடைக்கத் தந்த அற்பப் பொருளும் மிகப் பெரிதாகும்.

442. परोपकाराय फलन्ति वृक्षाः परोपकाराय वहन्ति नद्यः।
परोपकाराय दुहन्ति गावः परोपकाराय सतां विभूतयः ॥

பிறருக்கு உதவவே மரங்கள் காய்க்கின்றன. ஆறுகள் ஓடுகின்றன; பசுக்கள் பால் கறக்கின்றன. நல்லோரது செல்வம் பயன்படுகிறது.

443. परुषस्यातिमात्रस्य सूचकस्यानृतस्य च।
वाक्यस्याकालयुक्तस्य धारयेद्वेगमुत्थितम् ॥

அதிகக் கொடூரமானது, பிறரது குறையைக் கூறுவது, பொய், நேரத்திற் கொவ்வாதது இப்படிப் பேசநேர்ந்தால் அதன் வேகத்தை அடக்க வேண்டும்.

444. परोपघातक्रियया वर्जयेदर्जनं श्रियः।

பிறருக்கு இடையூறு விளைவித்துத் தனக்குச் செல்வம் சேமிப்பதைத் தவிர்க்க வேண்டும்.

445. परोपदेश वेलायां शिष्टाः सर्वे भवन्ति हि।
विस्मरन्तीह शिष्टत्वं स्वकार्ये समुपस्थिते ॥

பிறருக்கு வழி காட்டும்போது எல்லோரும் நல்வழி

நடப்பவராகின்றனர். சுய காரியம் நேரும்போது நல்வழி நடப்பதை மறந்து விடுகின்றனர்.

446. पाटवं सर्वत्र सौष्ठवं संपादयति ।

திறமை எங்கும் செயல் நேர்த்தியை உண்டாக்குகிறது.

447. पातुं कर्णाञ्जलिभिः किममृतं ! इह युज्यते सदुपदेशः ।

காதால் பருகத் தக்க அமுதம் எது ? நல்லோர் உபதேசம் இங்கு பொருந்தும்.

448. पात्रापात्रविवेकोऽस्ति धेनुपन्नगयोरिव ।
तृणात्सञ्जायते क्षीरं, क्षीरात्सञ्जायते विषम् ॥

புல் கொடுக்கப் பசு பால் தருகிறது. பால் கொடுக்கப் பாம்பு விஷம் தருகிறது. இப்படி இவ்விரண்டும் மாறுபாட்டுடன் பெறுவதற்கேற்றதான தகுதியும், தகுதியின்மையும் பெற்றுள்ளதைப் பகுத்தறிய வேண்டும்.

449. पादं पादेन नाक्रामेत् न कण्डूयेन्न शौचयेत् ।

காலைக் காலால் மிதிப்பதோ சொறிந்து விடுவதோ சுத்தி செய்வதோ கூடாது.

450. पानीयं वा निरायासं स्वाद्वन्नं वा भयोत्तरम् ।
विचार्य खलु पश्यामि तत्सुखं यत्र निर्वृतिः ॥

ஆயாசமின்றி குடிநீர், பயமூட்டிய பின் இனிய உணவு, எது நல்லது? ஆராய்கிறேன். எதில் அமைதியோ அதுவே சுகம்.

451. पापवृत्तवचस्सत्वाः सूचकाः कलहप्रियाः ।
मर्मोपहासिनो लुब्धाः परवृद्धिद्विषः शठाः ॥
परापवादरतयः चपला रिपुसेविनः ।
निर्गुणास्त्यक्तधर्माणः परिवर्ज्या नराधमाः ॥

நடைமுறையும் பேச்சும் எண்ணமும் பாபவழியில் கொண்டவர், புறங் கூறுபவர், கலகத்தில் இன்பம் காண்பவர், பிறரது மர்மத்தைக் குத்தும்படி பரிகசிப்பவர், பேராசை உள்ளவர், பிறரது வளர்ச்சியைப் பொறுக்காதவர், அடம்பிடிப்பவர், பிறரைக் குறை கூறுவதில்

ஆர்வமுள்ளவர், சஞ்சலமனமுள்ளவர், எதிரியை அண்டுபவர் நற்குண மற்றவர், கடமை தவிர்த்தவர், இத்தகைய கேடுகெட்ட மனிதர் தவிர்க்கத் தக்கவர்.

452. पूरा नदीनां, पुष्पाणि लतानां, शशिनः कलाः ।
क्षीणानि पुनरायान्ति यौवनानि न देहिनाम् ॥

ஆற்றின் பிரவாகம், கொடியில் பூக்கள், சந்திரனின் நிலவு இவை மறைந்து மறுபடி வெளிப்படும். மக்களின் வாலிபம் அப்படியல்ல.

453. पूर्वाभिभाषी, सुमुखः, काले हितमितमधुरार्थवादी स्यात् वश्यात्मा ।

முதலில் பேசத் தொடங்குபவன், இனிய தோற்றமுள்ளவன், உரிய நேரத்தில் இதமாக, அளவிற்கு உட்பட்டு, இனிதாக பொருளுள்ள பேச்சுடையவன், தன்னைக் கட்டுப்படுத்துபவன், மனிதன் இவ்வாறு ஆகவேண்டும்.

454. पृथुः प्रसादः प्रथमागतेषु निरादरत्वं चिरसंश्रितेषु ।
स्वाच्छन्द्यलीला विपुलावलेपात् एष स्वभावः सुलभः प्रभूणाम् ।

புதிதாக அறிமுகமாகுபவரிடம் அதிகப் பரிவு, வெகு நாளாகத் தன்னை அண்டியவரிடம் ஆதரவின்மை, தன்னிச்சையாகப் பெரும் செருக்குடன் விளையாட்டுப் போன்று நடைமுறை, இவை பிரபுக்களின் இயல்பு. எளிதில் பிறரால் உணரக் கூடியது.

455. पैशुन्यं साहसं द्रोहः ईर्ष्याऽसूयाऽर्थदूषणम् ।
वाग्दण्डजं च पारुष्यं क्रोधजोऽपि गणोऽष्टकः ॥
व्यसनानि दुरन्तानि क्रोधजानि विवर्जयेत् ॥

புறங் கூறுதல், வலிவிற்கு மீறிய செயல் முறை, துரோகம், பொறாமை, அசூயை, சேமித்த பொருளை வீணடித்தல், சுடு சொல், கடும் தண்டனை என்ற எட்டும் கோபத்தின் பின் விளைவு. இவை பழகக் கெட்ட பழக்கங்களாகி தவிர்க்க முடியாததாகும்.

456. प्रकृतिमभीक्ष्णं स्मरेत्, हेतुप्रभावनिश्चितः स्यात् । हेत्वारंभनित्यश्च ।
न कृतमित्याश्वसेत् । न वीर्यं जह्यात् । नापवादमनुस्मरेत् ॥

உலகத்தின் இயல்பை நினைவில் கொள்ள வேண்டும். (மாறி மாறித் தோன்றுவதே அதன் இயல்பு.) நல்லதால் நல்லதும் கெட்டதால் கெட்டதும் விளையும் என்ற காரணம் - பின் விளைவு இவற்றின் தொடர்பை ஐயமின்றி நினைவில் கொள்ள வேண்டும். எதிர் பார்த்தபடி நடக்க முன் திட்டமும் முயற்சியும் கொள். செய்தது போதுமென்று நம்பியிராதே. உடல் மனவலிவைத் தளர விடாதே. அவதூறு நேர்ந்ததைத் தொடர்ந்து நினைக்காதே.

457. प्रक्षालनाद्धि पङ्कस्य दूरादस्पर्शनं वरम् ।

சேற்றை அலம்பி அகற்றுவதைவிட சேறு ஒட்டாதபடி நடப்பதே நல்லது.

458. प्रतिभूर्न भवेत्क्वापि न च साक्षी वृथा भवेत् ।
स्थर्गीं न धारयेज्जातु द्यूतं दूरात्परित्यजेत् ॥

எங்கும் பிறருக்குப் பொறுப்பாளி (ஜாமீன்) யாகாதே. வீண் வழக்கில் சாட்சியாகாதே. பிறர் பொருளை அடகுக்கு எப்போதாவதுகூட வைத்துக் கொள்ளாதே. சூதாட்டத்தை நெருங்காதே.

459. प्रत्यहं पर्यवेक्षेत नरश्चरितमात्मनः ।
किं नु मे पशुभिस्तुल्यं किं नु सत्पुरुषैरिति ॥

என் நடைமுறை கால்நடைப் பிராணியுடையது போன்றுள்ளதா, நல்லோருடையது போன்றுள்ளதா எனத் தன் நடைமுறையை த் தினமும் சீர்த் தூக்கிப் பார்ப்பாய்.

460. प्रदोषे दीपकश्चन्द्रः प्रभाते दीपको रविः ।
त्रैलोक्यदीपको धर्मः सुपुत्रः कुलदीपकः ॥

இரவில் ஒளி தருபவன் சந்திரன். பகலில் ஒளி தருபவன் ஸூர்யன். மூவுலகிற்கும் ஒளிதருவது தருமம். குலத்திற்கொளி தருபவன் நன்மகன்.

461. प्रस्तावसदृशं वाक्यं सद्भावसदृशं प्रियम् ।
आत्मशक्ति समं कोपं कुर्वाणो न विनश्यति ॥

சூழ் நிலைக் கேற்பப பேசுபவன், நல்லெண்ணத்திற்கேற்ப

இனிதாகப் பேசுபவன், தன் சக்திக்கேற்பக் கோபிப்பவன், இவர்கள் அழிவதில்லே.

462. प्राणातिपातः स्तैन्यं च परदाराभिमर्शनम् ।
त्रीणि पापानि कायेन सर्वतः परिवर्जयेत् ॥

உயிருக்குக் கேடுவிளைவிப்பது, திருட்டு, பிறர் மனைவியைத் தீண்டுதல் இந்த மூன்றும் உடலாலான பாபங்கள். எந்நிலையிலும் தவிர்க்கத் தக்கவை.

463. प्रायो गच्छति यत्र दैवहतकः, तत्रैव यान्त्यापदः ।

பெரும்பாலும் பாழும் விதி செல்லும் வழியில்தான் ஆபத்துகளும் நேர்கின்றன.

464. प्रियश्च किं प्राणिनाम् ? असवः ।

மக்கள் பெரிதும் விரும்புவது எது? உயிர்.

465. प्रियमप्यहितं न वक्तव्यम् ।

பிரியமாயினும் ஹிதமல்லாததைச் சொல்லாதே.

466. प्रियवस्त्वपि कारणं ह्रियः त्याज्यम् ।

பிரியமான பொருளாயினும் கூச்சத்திற்குக் காரணமாயின் தவிர்க்கத் தக்கதே.

467. बुद्धिविद्यावयः शील धैर्यस्मृतिशमादिभिः ।
वृद्धोपसेविनो वृद्धाः स्वभावज्ञा गतव्यथाः ॥
सुमुखाः सर्वभूतानां प्रशान्ताः संशितव्रताः ।
सेव्याः सन्मार्गवक्तारः पुण्यश्रवणदर्शनाः ॥

அறிவு, கல்வி, வயது, ஒழுக்கம், தைரியம், நினைவாற்றல், மன அமைதி இவற்றின் காரணமாக, பெரியோரை மதித்துப் பின்பற்றுபவர், முதியவர், உலகியல்பு அறிந்தவர், மனக் குறை இல்லாதவர், எல்லோரிடமும் சமமாகப் பழகுபவர், அமைதியுள்ளவர், சுயக் கட்டுப்பாடு மிக்கவர், நல்வழி கூறுபவர், இவர்களை எப்போதும் அண்டிப் பணிவிடை செய்ய வேண்டும். இவர்களைப் பற்றிக் கேட்பதாலும் இவர்களைப் பார்ப்பதாலும் புண்யமுண்டு.

468. भक्त्या कल्याणमित्राणि सेवेतेतरदूरगः ।
अवृत्तिव्याधिशोकार्तान् अनुवर्तेत शक्तितः ॥

*நற்பணிகளில் உதவுகிற நண்பர்களுடன் அன்புடன் பழகுவாய். மற்றவரைத் தூர விலக்குவாய். பிழைக்க வழியற்றவர், நோயுள்ளவர், துயருற்றவர் இவருக்கு இயன்றவரை உதவுவாய்.*

469. भयं परिहरन्मन्दः आत्मानं परिपालयन् ।
वर्षासु क्लिन्नकटवत् तिष्ठन्नेवावसीदति ॥

*ஊக்கமின்றி எதிலும் பயந்து பயத்தைத் தீர்க்கத் தன்னைக் காப்பவனுக, மழையில் நனைந்த பாய்போல் நின்ற நிலையிலேயே உருக்குலைவான்.*

470. मदिरेव मोहजनकः कः ? स्नेहः ।

*கள்போல் சுயநிலை மறக்கச் செய்வது எது? பாசம்.*

471. मरणं प्रकृतिः शरीरिणां विकृतिर्जीवितमुच्यते बुधैः ।

*அறிவாளி மரணத்தை மக்களின் இயல்பாகவும், வாழ்வதைச் செயற்கையாகவும் கூறுவர்.*

472. मातरमिव वत्साः, सुखदुःखानि कर्तारमेव अनुगच्छन्ति ।

*வினை புரிந்தவரை சுகதுக்கங்கள் தாய்ப் பசுவைக் கன்று போல் பின் தொடர்கின்றன.*

473. मित्र-स्वजन-बन्धूनां बुद्धेर्धैर्यस्य चात्मनः ।
आपन्निकषपाषाणे नरो जानाति सारताम् ॥

*நண்பன், உறவினன், சுற்றத்தார், தன் அறிவாற்றல், தைர்யம், இவற்றின் வலிவை ஆபத்தெனும் உரைகல்லில் உரைத்து அறிகிறுன்.*

474. मौनं कालविलंबश्च प्रयाणं भूमिदर्शनम् ।
भ्रुकुट्यन्यमुखी वार्ता नकारः षड्विधः स्मृतः ॥

*'இல்லை' என்பதைத் தெரிவிக்க ஆறு முறைகள் - மவுனம், காலத்தை தாமதப்படுத்தல், வெளியே சென்று விடுவது, தரையை உற்று நோக்குவது, புருவத்தை நெரிப்பது, பராமுகமாகப் பேசுவது என.*

475. यत्किञ्चनकारी स्वैः परैर्वा अभिहन्यते ।

பொறுப்பின்றி செயல்படுபவன் தன் மக்களாலும் பிறராலும் தாக்கப் பெறுவான்.

476. यथा यथा कामयते ततो वाञ्छा प्रवर्तते ।
प्राप्त एवार्थतः सोऽर्थः यतो वाञ्छा निवर्तते ॥

ஒன்றை விரும்பிப் பெற்ற பின்னும் அதில் ஆசை வளர்ந்து கொண்டே இருக்கும். (அது நாடத்தக்கதல்ல) எதனைப் பெற்றதும் அதனை மறுபடி பெற ஆசை தோன்றாதோ அதுவே நாடத்தக்க பொருள்.

477. यदीच्छसि वशीकर्तुं जगदेकेन कर्मणा ।
परापवादसस्येभ्यो गाश्चरन्तीर्निवारयेत् ॥

உலகை வசப்படுத்துகிற ஒரே செயலாக - பிறரைப் பற்றி அவதூறு கூறுவதென்ற பயிரை மேயச் செல்கிற பேச்சாகிற மாடுகளைத் தடுத்து நிறுத்த வேண்டும்.

478. ययोरेव समं वित्तं ययोरेव समं कुलम् ।
तयोर्मैत्री विवाहश्च न तु पुष्टविपुष्टयोः ॥

செல்வமும், குலமும் ஒத்தவரிடையே தான், நட்பும் திருமணமும் நிலைக்கும். செழிப்புள்ளவருக்கும் செழிப்பில்லாதவருக்கும் இடையே இல்லை.

479. यस्मिन्देशे न संमानो न प्रीतिर्न च बान्धवाः ।
न च विद्यागमः कश्चित् न तत्र दिवसं वसेत् ॥

நன்மதிப்போ அன்போ சுற்றமோ கல்விக்கான வாய்ப்போ இல்லாத ஊரில் ஒருநாள் கூடத் தங்கக் கூடாது.

480. यादृशाचरणं यस्य स तादृग्विन्दते फलम् ।
यादृगिच्छेच्च भवितुं तादृग्भवति पूरुषः ॥

எத்தகையவருடன் கூடிப் பழகுகிறானோ, எத்தகையவரிடம் பணிபுரிகிறானோ, எப்படி ஆக விரும்புகிறானோ அப்படி மனிதன் ஆகிறான்.

481. यान्ति न्याय प्रवृत्तस्य तिर्यञ्चोऽपि सहायताम् ।
अपन्थानं तु गच्छन्तं सोदरोऽपि विमुञ्चति ॥

நேர்மையுடன் பழகுபவனுக்கு மிருகங்களும் துணை புரிகின்றன. நேர்மையற்ற வழியில் செல்பவனைக்கூடப் பிறந்தவனும் விலக்கிவிடுகிறான்.

482. युक्ति युक्तं प्रगृह्णीयात् बालादपि विचक्षणः।
रवेरविषयं वस्तु किं न दीपः प्रकाशयेत्॥

சிறுவனுயினும் யுக்திக்குப் பொருந்துமாயின் அவன் சொல்லை ஏற்க வேண்டும். சூரிய ஒளியில் புலனாகாததைத் தீபம் விளக்காதா?

483. यो यमर्थं प्रार्थयते यदर्थं घटतेऽपि च।
अवश्यं तदवाप्नोति न चेच्छ्रान्तो निवर्तते॥

எதனை நாடுகிறானோ, நாடியதைப் பெறுவதில் ஈடுபடுகிறானோ, நடுவில் தளர்ந்து பின் வாங்காதவரை, அவன் அதைப் பெறுவது உறுதி.

484. राजा कुलवधूर्विप्रो मन्त्रिणश्च पयोधरः।
स्थानभ्रष्टा न शोभन्ते दन्ताः केशा नखा नराः॥

அரசன், குலமகள், அந்தணன், மந்திரி, ஸ்தனம், பற்கள், கேசம், நகம் மனிதன் இவர்கள் நிலை நழுவிவிட்டால் சோபிப்பதில்லை.

485. वञ्चकस्य न परिजनः, नापि स दीर्घायुः।

ஏமாற்றுபவனுக்கு உற்றார் உறவினரில்லை. அவனது ஆயுளும் நீளாது.

486. वरं दारिद्र्यमन्यायप्रभवाद्विभवादिह।
कृशताभिमता देहे पीनता न च शोफतः॥

நேர்மையற்ற வழியில் பெற்ற செல்வத்தைவிட ஏழ்மையே மேல். வீக்க நோயால் பருத்திருப்பதைவிட உடலின் இளைப்பே மேல்.

487. वशिनां हृदयं न किल्बिषं सहते।

தன்னடக்கமுள்ளவரின் இதயம் தீச்செயலைப் பொறுக்காது.

488. वित्तेन रक्ष्यते धर्मो विद्या योगेन रक्ष्यते।
सज्जनैः रक्ष्यते भूपः सत्स्त्रिया रक्ष्यते गृहम्॥

நல் வழிவந்த செல்வத்தால் தர்மமும், தொடர்ந்த பயிற்சியால் கல்வியும், நல்லோரால் அரசனும், நல்ல மாதரால் வீடும் பாதுகாக்கப் பெறுகிறது.

489. विद्वानेव विजानाति विद्वज्जनपरिश्रमम् ।
न हि वन्ध्या विजानाति गुर्वीं प्रसववेदनाम् ॥

அறிவாளியே அறிவாளிகளின் உழைப்பை அறிவர். மலடி கடும் பிரஸவ வேதனையை அறியாள்.

490. विहाय पौरुषं यो हि दैवमेवावलम्बते ।
प्रासादसिंहवत् तस्य मूर्ध्नि तिष्ठन्ति वायसाः ॥

சுயமுயற்சியின்றி விதியை நம்புபவன் மதிற்சுவற்றின் மீதுள்ள சிங்கப் பதுமைபோல். அவன் தலையில் காக்காய் அமரும்.

491. वृथा वृष्टिः समुद्रेषु वृथा तृप्तेषु भोजनम् ।
वृथा दानं धनाढ्येषु वृथा दीपा दिवापि च ॥

கடலில் பெய்த மழைவீண், வயிறு நிறைந்தவனுக்கு உணவிடுவது வீண். செல்வந்தனுக்குத் தானம் வீண். பகலில் தீபம் வீண்.

492. वृश्चिकस्य विषं पुच्छे मक्षिकायाश्च मस्तके ।
तक्षकस्य विषं दन्ते सर्वाङ्गे दुर्जनस्य तत् ॥

தேளுக்குக் கொடுக்கில் விஷம். ஈக்குத் தலையில் விஷம். தக்ஷகனுக்கு பல்லில், தீயவனுக்கு உடலெங்கும் விஷம்.

493. व्रजत्यधः प्रयात्युच्चैः नरः स्वैरेव चेष्टितैः ।
अधः कूपस्य खनकः ऊर्ध्वं प्रासादकारकः ॥

கிணறு வெட்டுபவன் கீழும், உப்பரிகை கட்டுபவன் மேலும் செல்வதுபோல் மனிதன் தன் செயலுக்கேற்ப கீழும், மேலும் செல்கிறான்.

494. शनैः पन्थाः शनैः कन्थाः शनैः पर्वतमस्तके ।
शनैर्विद्या शनैर्वित्तं पञ्चैतानि शनैः शनैः ॥

தொடர்ந்து செல்வதால் வழி கடக்கப்படுகிறது. தொடர்ந்து உடுத்துவதால் துணி கந்தலாகிறது. தொடர்ந்து ஏறுவதால் மலை உச்சி ஏற முடிகிறது. தொடர்ந்து படிப்பதால் கல்வியும், தொடர்ந்து சேமிப்பதால் செல்வமும் சேர்கின்றன.

495. शीलभारवती कान्ता पुष्पभारवती लता।
अर्थभारवती वाणी भजते कामपि श्रियम्॥

ஒழுக்கச் சுமையுள்ள மனைவியும், பூச்சுமை கொண்ட கொடியும், பொருட்சுமை கொண்ட பேச்சும் விளக்க இயலாத பெருமை பெறுகின்றன.

496. शीलं न तत्प्रकाशे स्यात् यद्द्योतेतान्धतामसे।
समयज्ञे सत्यसन्धे कृतज्ञे तद्विभाव्यते॥

ஒழுக்கம் என்பது காட்சிப் பொருளல்ல. கடும் இருட்டிலும் அது ஒளிரும். ஒப்பந்தப்படி நடப்பவன், உண்மையில் உறுதியுடன் நிற்பவன், நன்றியுணர்பவன் இவர்களிடம் இதனைக் காணமுடியும்.

497. शीलं शौर्यं अनालस्यं पाण्डित्यं मित्रसंग्रहः।
अचोरहरणीयानि पञ्चैतान्यक्षयो निधिः॥

நல்லொழுக்கம், பேராற்றல், சோம்பலின்மை, கல்வியறிவு, நண்பர் குழாம் இவ்வைந்தும் திருடரால் அபகரிக்க இயலாத குறையாத நிதி.

498. शौर्यं स्खलति विघ्नेन विद्या विस्मरणेन च।
मेधा परानङ्गीकृत्या नयः सेव्याप्रसादनात्॥

பேராற்றல் தடையாலும், கல்வி மறதியாலும், நுண்ணறிவு பிறரது அங்கீகாரம் பெறாததாலும், நேர்மை எஜமானனுக்கு உவப்பாகாததாலும் நிலைத்து நிற்பதில்லை.

499. सत्यवादिनं अक्रोधं अध्यात्मप्रवणेन्द्रियम्।
शान्तं सद्वृत्तनिरतं विद्यान्नित्यरसायनम्॥

உண்மை பேசுபவன், கோபமில்லாதவன், உள்ளே தன் ஆத்ம நிலையைக் காணப் பொறிகளைச் செலுத்துபவன், அமைதியுள்ளவன், நன்னடை முறையில் ஆர்வமுள்ளவன், நித்திய ரஸாயன முறை கொண்டவன்.

500. सदयं हृदयं यस्य भाषितं सत्यभूषितम् ।
कायः परहिते यस्य कलिस्तस्य करोति किम् ॥

*தயை நிரம்பிய இதயம், ஸத்யத்தால் அழகுற்ற பேச்சு, பிறருக்கு உதவுவதில் ஆர்வமிக்க உடல், இம்மூன்றும் பெற்றவனிடம் கலி என்ன செய்யும்?*

501. सद्भिरेव सहासीत सद्भिः कुर्वीत संगतिम् ।
सद्भिर्विवादं मैत्रीं च नासद्भिः किञ्चिदाचरेत् ॥

*நல்லோருடன் கூடி இருக்க வேண்டும். நல்லோருடன் கூடிப் பழக வேண்டும். நல்லோருடன் நட்பும் கருத்துப் பரிமாறுதலும் கொள்ள வேண்டும். தீயோருடன் எதுவும் செய்யக் கூடாது.*

502. सन्तोषः त्रिषु कर्तव्यः स्वदारे भोजने धने ।
त्रिषु नैव च कर्तव्यः दाने तपसि पाठने ॥

*தனது மனைவி, தன் உணவு, தன் செல்வம், இவற்றில் போது மென்ற மனநிறைவுகொள். தானத்திலும் உழைப்பிலும் கற்பிப்பதிலும் போதும் என்று எண்ணாதே.*

503. स प्रियो लोकानां योऽर्थं ददाति । स दाता महान् यस्य नास्ति प्रत्याशो पहतं मनः ।

*வாரி வழங்குபவனே மக்களுக்கு இனியவன். எதிர் பார்ப்பின்றி வழங்க மனமுள்ளவனே மகான்.*

504. संभ्रमः स्नेहमाख्याति वपुराख्याति भोजनम् ।
विनयो वंशमाख्याति देशमाख्याति भाषितम् ॥

*பரபரப்பு நட்பையும், உடல்வாகு உணவின் தரத்தையும், வினயம் குலப் பெருமையையும் பேச்சு தேசத்தையும் காட்டும்.*

505. स विभवो मनुष्याणां, यः परोपभोग्यः । न तु यः स्वस्यैवोपभोग्यः व्याधिरिव ।

*பிறருக்குப் பயன்படுவதே செல்வம். நோய் போன்று தான் மட்டும் அனுபவிக்கத் தக்கதல்ல.*

506. सत्यानुसारिणी लक्ष्मीः कीर्तिस्त्यागानुसारिणी।
अभ्याससारिणी विद्या बुद्धिः कर्मानुसारिणी ॥

*செல்வம் உண்மையையும், புகழ் தியாகத்தையும், கல்வி பயிற்சியையும், அறிவு வினையையும் தொடரும்.*

507. सा श्रीः या न मदं कुर्यात्, स सुखी तृष्णयोज्झितः।
तन्मित्रं यत्र विश्वासः पुरुषः स जितेन्द्रियः ॥

*செருக்கைக் கொடுக்காததே செல்வம். வேட்கையற்றவனே சுகமுள்ளவன். நம்பத்தக்கவனே நண்பன். புலனடக்கமுள்ளவனே மனிதன்.*

508. सुखार्थाः सर्वभूतानां मताः सर्वाः प्रवृत्तयः।
सुखं च न विना धर्मात् तस्माद्धर्मपरो भवेत् ॥

*எல்லா உயிரினத்தின் நடைமுறையும் சுகம் பெறும் பொருட்டே. தர்மமின்றி சுகமில்லை. அதனால் தர்மத்தில் நாட்டமுள்ளவனாக வேண்டும்.*

॥ शुभम् ॥